# அருள்மிகு
# சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## மருதமலை

கல்வீரம்பாளையம் அஞ்சல், — கோவை.

இயற்கைக்கு எழில் கொடுக்கும் முருகன் இருப்பது மருதமலை !

அஞ்ஞானத்தைப் போக்கும் மெய்ஞ்ஞானத் தவமுனிவர் உறையும் மலை !

பாம்பாட்டிச் சித்தர் தவவலிமை பெற்ற தண்பொழில் சூழ் மலை !

---

இத்தலம் கோவையிலிருந்து 10 கி. மீ. தொலைவில் உள்ளது. பக்தர்கள் ஊர்திகளில் மலைமேல் செல்லப் பாதை உள்ளது.

---

மாதக் கிருத்திகை விழா - கார்த்திகைத் தீபப் பெரு விழா-

தைப்பூசப் பெருந் திருவிழா-கண்டு களிக்க வேண்டியவை!

வாரீர் ! வாரீர் ! முருகனருள் பெற வாரீர் !

மருதமலைத் திருக்கோயில் நிர்வாகத்தில் உயர்நிலைப் பள்ளியும் இலவசச் சித்த மருத்துவ மனையும் நடத்தப்படுகின்றன.

பொற்குவை தாரீர் ! மருதமலை ஆண்டவன் அருள்பெற வாரீர் !

*மருதமலை,*
*14—6—74.*

(ஒம்.) ஆர். எம். இராதாகிருஷ்ணன், பி. எஸ்ஸி.,
*செயல் அலுவலர்.*




மாலை 16 ஆனந்த–ஆனி சூலை 74 மணி 10

**முகப்பு :**

மதுரைக் கோயிலினுள் இருக்கும் கலை வேலைப்பாடு மிக்க கனகசபை மண்டபம்.



## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

* 'திருக்கோயில்' திங்கள் இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விருப்பமுள்ளவர்கள் ''திரு. ஆணையர், அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600034'' என்னும் முகவரிக்கு ரூபாய் பத்து அனுப்பி எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

* அந்தந்த வட்டார அறநிலைய உதவி ஆணையர்களின் அலுவலகங்களிலும் சந்தாவைச் செலுத்திச் சந்தாதாரராகப் பதிவு செய்து கொள்ளலாம்.

* இதழ்கள் தவறாது கிடைத்திடச் சந்தாதாரர்கள் முழு முகவரியைத் தெரிவிக்க வேண்டும். முகவரி மாற்றத்தை உடனுக்குடன் தெரிவித்திடவும் வேண்டும்.

* எல்லா ஊர்களுக்கும் முன் பணம் கட்டும் விற்பனையாளர்கள் தேவை.

ஆண்டுச் சந்தா ரூ. 10/- தனி இதழ் ரூ. 1/-

## பொருளடக்கம்

1. திரை விலகியது
2. அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும்
3. இறை வழிபாடு (திருமுருக கிருபானந்த வாரியார்)
4. பத்திமையின் பண்பாடு (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)
5. ஞானக்கொழுந்து (கி. வா. ஜகந்நாதன்)
6. மதுரைக் கோயில் அமைப்பும், மாட்சியும் (கே. எஸ். நரசிம்மன், ஆணையர்)
7. தொல்காப்பியம் சுட்டும்சமயக் கருத்துக்கள் (ந. ரா. முருகவேள்)
8. மதுரைக் கலம்பகம்
9. செய்திச் சுருக்கங்கள்
10. நெல்லையப்பர் கோயிற் குடமுழுக்கு விழா
11. மதிப்புரைகள்
12. மதுரைத் தல மாண்பு
13. சிவநெறி பேணிய செல்வப் பல்லவன்
14. திருப்பேரூர் (தலவரலாறு) (கே. எஸ். ஜெகந்நாதன்)

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

# திரை விலகியது

தலைவர் அவர்களே! இந்தத் தீர்மானத்தை நம்முடைய மாமன்றம் நிறைவேற்றுகின்ற இந்த நாள், ஒரு மகிழ்ச்சிகரமான நாள் என்பதை, நான் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன். தாழ்த்தப்பட்ட மக்களுக்காகப் போராடியவர்களில் இந்தியாவில் தலைசிறந்தவர்களாக விளங்கியவர்களில் ஒருவரான டாக்டர் அம்பேத்கார் அவர்களின் பிறந்த நாள், நேற்றைய தினமாகும். இந்தத் தீர்மானத்தை விவாதித்துக்கொண்டிருக்கிற இந்த நாள், இந்த அவைத் தலைவராகிய தாங்கள் பிறந்த நாள் என்பதை எண்ணுகிற நேரத்தில், தங்களுக்கு இந்த அவை உறுப்பினர்கள் சார்பாக என்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். அனைவரும் மகிழத்தக்க ஒரு தீர்மானத்தை இந்த அவை உறுப்பினர்கள் மிக விளக்கமாக விவாதித்து, அதை நிறைவேற்றுகிற கட்டத்தில் எடுத்துச் சொல்லப்பட்ட சில கருத்துக்கள் மீது, என்னுடைய கருத்துக்களையும் இணைய வைப்பது, சாலப் பொருத்தமுடையது என்றே நான் கருதுகிறேன். இந்தச் சட்டத்தை, அனைவரும் அர்ச்சகர்களாக ஆகலாம் என்ற சட்டம் இந்த மாமன்றத்தில் நிறைவேற்றப் பெற்று சிலர் அந்தச் சட்டத்தை நீதி மன்றத்தினுடைய கூண்டுகளிலே ஏற்றி, அது முடக்கப்பட்டு விட்டபிறகு, நான் டெல்லிக்குச் சென்ற போது மத்திய அமைச்சர் திரு. ஜெகஜீவன்ராம் அவர்களைக் கூட, சந்தித்து இதைப் பற்றிப் பேசியிருக்கிறேன். ஆகவே இன்றைக்கு நாம் நிறைவேற்ற இருக்கிற இந்தத் தீர்மானம், மத்திய அரசில் நல்ல புரட்சிகரமான எண்ணம் கொண்டவர்களால் வரவேற்கப்படும் என்ற நம்பிக்கை எனக்குத் திடமாக இருக்கிறது. பாராளு மன்றத்தில் நம்முடைய தீர்மானத்தினுடைய நல்ல நோக்கத்தை உணர்ந்து அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கான வழி வகைகளைச் செய்வார்கள் என்று நான் நம்புகின்றேன். இந்த விவாதத்தினிடையே பேசிய நம் கம்யூனிஸ்ட் கட்சியினுடைய தலைவர் திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் சோவியத் ரஷ்யாவில் எப்படி மத உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதையும், அதே நேரத்தில் அதை எதிர்த்துப் பேசுகின்ற உரிமை எந்த அளவிற்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதையும், சுட்டிக்காட்டினார்கள். இங்கும் கூட கடவுள் நம்பிக்கை பற்றிப் பேசுகிறவர்களும் அல்லது கடவுள் நம்பிக்கை தவறு என்று பேசுகிறவர்களும் அனுமதிக்கப்படுகிறார்கள் என்பதையும், மதச் சார்பற்ற ஒரு சர்க்காரில் இருக்கிற நிறுவனங்கள், வானொலி போன்ற அமைப்புக்கள் முழுக்க முழுக்க மதப் பிரசாரம் செய்து கொண்டு வருகிறது என்கின்ற மிகப் பொருத்தமான ஒரு குற்றச்சாட்டைக் கம்யூனிஸ்ட் கட்சியினுடைய தலைவர் திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் இங்கு எடுத்துச் சொன்னார்கள். நானும் அவர்கள் இங்கே எழுப்பிய அந்தக் குற்றச்சாட்டை வரிக்கு வரி அப்படியே ஒப்புக் கொள்கின்றேன். இதே கருத்தை அவர்கள் கடந்த 5,6, நாட்களுக்கு முன்பு இந்த மன்றத்திலே கொண்டு வந்த ஒத்தி வைப்புத் தீர்மானத்தின் போதும் வலியுறுத்தினார்கள். இதனை ஏற்றுச் செயல்படுத்துகின்ற இடத்தில் தமிழக அரசு இல்லாவிட்டாலும், இன்றைக்குச் செயல்படுத்துகின்ற இடத்திலே இருக்கிற மத்திய அரசு வானொலியை இனிமேலாவது நாட்டு மக்களுடைய பல்வேறு பிரச்சினைகளை அணுகுகின்ற வகையில், பயன்படுத்துகின்ற முயற்சியிலே ஈடுபடுவார்கள் என்று நான் நம்புகிறேன். மதப் பிரச்சாரத்திற்கு அவர்கள் அறவே இடம் தரக் கூடாது என்று கூறவில்லை. இந்து மதத்திற்கு, இஸ்லாம் மதத்திற்கு, கிறிஸ்தவ மதத்திற்கு இப்படிபல்வேறு மதங்களுக்கென்று அவர்கள் நேரத்தை ஒதுக்கீடு செய்து இன்றைக்கு அந்தப் பிரச்சாரத்திற்கு வானொலியைப்பயன்படுத்துகிறார்கள். அதைப் போலவே, பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்கென்றும் வானொலியிலே ஒரு குறிப்பிட்ட



மாண்புமிகு டாக்டர். கலைஞர் முதல்வர்

நேரத்தை அவர்கள் ஒதுக்கிட வேண்டும். அதற்கு ஆவன செய்கின்ற முயற்சியை மத்திய அரசு எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதையும், இங்கே கே. டி. கே. அவர்கள் எடுத்துச் சொல்ல அந்தக் கருத்துக்களோடு நான் இணைந்து ஒரு வேண்டுகோளாக வைக்கக் கடமைப்பட்டு இருக்கிறேன்.

பல பெரியவர்கள் எடுத்துச் சொன்ன கருத்துக்கள், வாழ்க்கை வரலாறுகள், மறைந்து விட்டவர்களுடைய சிறப்பு இயல்புகள் இவைகளைப் பற்றியெல்லாம் வானொலியிலே எடுத்துச் சொல்லப்படவில்லை என்கின்ற குறைபாட்டினையும் அவர்கள் இங்கே குறிப்பிட்டார்கள். பொதுவாக, சீர்திருத்தக் கருத்துக்கள், எல்லோராலும் ஒத்துக்கொள்ளப் படக்கூடிய சீர்திருத்தக் கருத்துக்கள், இவைகளையெல்லாம் இன்றைக்கு இந்த நாட்டில் எடுத்துச் சொன்னால், அந்தக் கருத்துக்கள் ஆழப் பதிந்து, வேர் ஊன்றி விடுமேயானால், நாட்டிலே சில மூட நம்பிக்கைகளின் பின்னால் ஒளிந்துகொண்டு வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறவர்கள், மக்களை ஏமாற்றிக் கொண்டிருக்கின்றவர்கள், சில சகுனிகள், இப்படிப்பட்டவர்கள் எங்கே தங்களுடைய நிலை கீழே போய்விடுமோ என்கின்ற பயத்தின் காரணமாக, புரட்சிகரமான கருத்துக்களை எடுத்துச் சொல்கின்ற நேரத்தில், அதை அவர்தான் சொல்ல முடியும், மற்றவர்கள் யாரும் சொல்ல முடியாது என்கின்ற திரையைப் போட்டு அதை மூடி விடுகிறார்கள். உத்தமர் காந்தி அடிகள் அனைவரும் சமம் என்று கூறினார்கள் என்றால், அதைக் காந்தி சொல்லலாம், மற்றவர்கள் சொல்ல முடியுமா என்று கூறி, ஆகவே கடவுளின் அவதாரம் என்று எடுத்துக் காட்டி, கடவுளின் அவதாரங்களால்தான் அப்படிப் பேச முடியும், சாதாரண மக்களால் அப்படிப் பேச முடியாது என்று தங்களுடைய கருத்துக்களுக்கு ஆக்கம் தருவதற்குப் புரட்சிகரமான கருத்துக்களை மறைத்து விடுகிறார்கள்.

அதைப் போலத்தான் சித்தர்கள் என்கின்ற பெரும் புலவர்கள் தமிழகத்தில் இருந்தார்கள். மிகப் புரட்சிகரமான கருத்துக்கள், சாதி சமயங்களைச் சாடுகின்ற அளவுக்கும், ஆயிரக் கணக்கான கடவுள்களை நாம் வணங்கத் தேவையில்லை என்கின்ற அளவுக்கும், அந்தக் கருத்துக்கள் எடுத்துச் சொல்லப்பட்டன. அவைகளை அவர்கள் எல்லாம், சிவவாக்கியர் என்ன, மற்ற சித்தர்கள் சொல்ல முடியும், அவர்களால் அந்தக் கருத்துக்களைச் சொல்ல முடியும்—மற்றவர்கள் சொல்ல முடியுமா என்று அந்தக் கருத்துக்களுக்கும் அணை போட்டுவிட்டார்கள்.

கவிச்சக்கரவர்த்தி சுப்பிரமணிய பாரதியார்கூடச் சாத்திரங்களைக் கண்டித்தார். சம்பிரதாயங்களைச் சாடினார். சொர்க்கம், நரகம் என்று சொல்லப்படுகின்றவைகளை எல்லாம், 'ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி அலையும் அறிவிலிகாள்!' என்று கூட அழுத்தந்திருத்தமாக எடுத்துச் சொன்னார். ஆனால் என்னவாயிற்று? அவர் மறைவுக்குப் பிறகு அந்தப் பாடல்கள் எல்லாம் முன்னுக்குத் தள்ளப் பட்டு, அவர்கள் மறுபக்கத்திலே பாடிய பாடல்கள் எல்லாம் பின்னால் வைக்கப்பட்டு, முதலிலே இதைப் பாடினார் என்று பின்னால் வைக்கப் பட்டு, திருந்திய பிறகு பாடினார் என்று அப் பாடல்கள் முன்னால் வைக்கப்பட்டு, அவருடைய எண்ணங்களையும் கருத்துக்களையும் நாட்டிலே மறைத்து விட்டார்கள்.

தந்தை பெரியார் அவர்கள் பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்தார்கள். அவர் வழி வந்த பேரறிஞர் அண்ணா அவர்கள் பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்தார்கள். தந்தை பெரியார் அவர்கள் வழியில் வாழ்ந்து மறைந்த ஜீவா, சமதர்மப் பிரச்சாரம் செய்தார். திரு. கே. வி. அழகர்சாமி போன்றவர்கள் நடத்திய பிரச்சாரம், பாரதிதாசன் போன்றவர்கள் சொல்கின்ற பிரச்சாரம் — அவர்கள் சொல்கின்றார்கள் என்றால், அவர்கள் எப்படிப்பட்டவர்கள் தெரியுமா? என்று எடுத்துச் சொல்லப் பட்ட கொள்கைகளுக்கு, கருத்துக்களுக்கு விமர்சனங்கள் செய்யப்படாமல், எடுத்துச் சொல்லப் பட்ட ஆட்களின் மீது மக்களுக்கு வெறுப்பை உண்டாக்கி, அதன் காரணமாக, நல்ல கருத்துக்கள் நாட்டிலே திரை போடப்பட்டது.

இன்று அந்தத் திரை விலகி, எல்லாக் கட்சிகளும் ஒத்துக் கொள்ளக்கூடிய ஒரு சமதர்ம நோக்கோடு செயல்படுகின்ற இந்த அரசு, இந்த அவையிலே கொண்டு வந்திருக்கிற இந்தத் தீர்மானத்தை, மாண்புமிகு உறுப்பினர்கள் அனைவரும், அனைத்துக் கட்சிகளுடைய தலைவர்களும், அனைத்துக் கட்சி உறுப்பினர்களும் வரவேற்றிருப்பதை, நான் மிகுந்த மகிழ்ச்சியோடு பாராட்டுகின்றேன். இது நம்முடைய நண்பர் மாரிமுத்து அவர்கள் எடுத்துச் சொல்வதைப் போலவும், கந்தப்பன் அவர்கள் சுட்டிக் காட்டியதைப் போலவும், அம்மையார் அவர்கள் பேசிய நேரத்திலே குறிப்பிட்டதைப் போலவும், யாரோ சிலரை அர்ச்சகர்களாக ஆக்கிவிட வேண்டும், அதுதான் பெரிய உத்தியோகம், அந்த உத்தியோகத்திற்குச் செல்ல முடியாமல் தாழ்த்தப்பட்ட மக்கள், பின் தங்கிய மக்கள் தவிக்கின்றார்கள். ஆகவே அவர்களை உச்சாணிக் கொம்பிலே ஏற்றி வைத்திட வேண்டுமென்பதல்ல. உச்சாணிக் கொம்பிலே அவர்களை ஏற்றவிடாமல் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்தச் சமுதாயத்தைச் செல்லரித்து வருகின்ற மூடப் பழக்க வழக்கங்களின் தலைமீது மண் போடுகின்ற சம்மட்டி அடிதான் என்று, இந்தத் தீர்மானத்தை ஏற்றுக் கொண்டு அர்ச்சகர்களாக ஆகலாம், அனைவரும் ஆகலாம் என்று கூறுகிறோம்.

இங்கே நம்முடைய கே. டி. கே. தங்கமணி அவர்கள் பேசும்பொழுது, கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும், ஒன்றை அழகாகச் சொன்னார்கள். அர்ச்சகர்கள் கடவுள் நம்பிக்கை படைத்தவர்களாக இருக்க வேண்டும் என்று சொன்னார்கள். நான் அதை ஏற்றுக் கொள்கிறேன். அந்தக் கடவுளைப் பற்றியெல்லாம் நம்பிக்கையில்லாமல், அந்தக் கடவுள் மீது விஸ்வாசம் இல்லாமல், இந்தத்

துளசியையும் வில்வத்தையும் எடுத்துக்கொண்டு அர்ச்சனை செய்து கொண்டிருப்பார்களானால், அவர்களுடைய உதடு ஒன்றை உச்சரிக்கும், உள்ளம் ஒன்றை எண்ணிக் கொண்டிருக்கும். ஆகவே உதட்டிலே ஒன்றையும் உள்ளத்திலே ஒன்றையும் வைத்துக் கொண்டிருப்பதை யாரும் பார்த்துக் கொள்ள மாட்டார்கள். கடவுள் நம்பிக்கை அறங்காவலர்களுக்கும் வேண்டாமா என்று பார்த்தால், நிர்வாகம் வேறு, தோத்திரம் வேறு. தோத்திரம் ஆண்டவனோடு இரண்டறக் கலப்பது என்று இன்றைக்குப் பொருள் சொல்லப்படுகின்றது. ஆகவே, இந்தத் தோத்திரங்கள் ஆண்டவனிடத்திலே நம்பிக்கை உள்ளவர்களால்தான் செய்யப்படும் என்று, இங்கே நம்முடைய மாண்புமிகு கண்ணப்பன் அவர்கள் எடுத்துக் காட்டியதைப் போல், அர்ச்சனைப் பயிற்சி தேர்ச்சி பெறுகின்றவர்கள், ஓரளவு கல்விப் பயிற்சியில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். அந்தப் பயிற்சிக்குப் பின்னால், அவர்களுக்கு இந்தப் பயிற்சி அளிக்கப்படும் என்று கோடிட்டுக் காட்டியதையும் இந்த அவையினுடைய கவனத்திற்குக் கொண்டு வந்து, இந்தத் தீர்மானத்தை ஒருமித்த அளவில் நிறைவேற்றி ஆதரவளித்தமைக்கு அனைவரையும் பாராட்டி இந்த அளவில் அமைகின்றேன்.



சேலம் அருள்மிகு சுகவனேசுவரசுவாமி திருக்கோயிலில், உதவி ஆணையர் திரு. எஸ். கோபாலகிருஷ்ணன், B.Sc., அவர்கள் தலைமையில் நிகழ்ந்த இலவசத் திருமண விழாவில், அறங்காவலர் குழுத் தலைவர் திரு. பி. எஸ். மாணிக்கம், எம்.சி., அவர்கள் உரை நிகழ்த்துதல். (4-3-74).

# அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும்

தலைவர் அவர்களே, மிக முக்கியத்துவம் வாய்ந்த இந்தத் தீர்மானத்தை அனைத்துக் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்களும் தலைவர்களும் சிறந்த முறையில் ஆதரித்துத் தீர்மானத்தோடு சிறந்த கருத்துக்களை எல்லாம் இணைத்து ஆதரவு கொடுத்தமைக்காக என்னுடைய நன்றியை இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

12—1—1971-ஆம் நாள், இந்தச் சட்டத் திருத்தத்தை இதே சட்ட மன்றத்தில் கொண்டு வந்து ஏகமனதாக நிறைவேற்றி நாம் இந்தச் சட்டத்தைச் செயல்படுத்த முனைந்தோம். பரம்பரை முறை எல்லா நிலையிலும் ஒழிக்கப்படுகிற நேரத்தில், கோயில்களில் அர்ச்சகர்களாக இருப்பதிலும் பரம்பரை முறை ஒழிக்கப்பட வேண்டும், அனைத்துச் சாதியினரும் போதுமான தகுதிகள் இருக்குமானால் அர்ச்சகர்களாக வரலாம் என்ற சட்டத்தை 1971-ஆம் ஆண்டில் உண்டாக்கினோம். ஆனால் அப்படிப்பட்ட சட்டத்தின் பேரில் பல உயர்ந்த சாதிக்காரர்கள் ஒன்று சேர்ந்து உச்ச நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்து இறுதியாக வந்திருக்கிற தீர்ப்பின் விவரத்தை எல்லாம் இந்த மன்றம் நன்றாக அறிந்திருக்கும். பரம்பரை ஒழிக்கப்பட வேண்டுமென்ற சட்டத் திருத்தத்தை ஏற்றுக் கொண்டாலும், அந்தந்தக் கோயில்களில் ஆகம விதி முறைகளுக்கு ஏற்றாற்போல்தான் அர்ச்சகர்களை நியமிக்க முடியும் என்று, அவர்களுடைய தீர்ப்பில் ஒரு குறிப்பைச் சொல்லுகிற காரணத்தால் மீண்டும் இந்திய அரசியல் சட்டத்திற்கு உட்பட்ட வகையில், இந்தச் சட்டத்தைச் செல்லுபடியாக்க முடியாது என்ற காரணத்தால், அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டுமென்று சொல்லி, நாம் பல முறை நம்முடைய அரசாங்கத்தின் சார்பில் முயற்சிகளை எடுத்துக் கொண்டோம்.

12—1—1971-ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட இந்தச் சட்டம், உச்ச நீதி மன்றத்தில் 14—3—72-ஆம் நாளில் சட்டத்தின் ஒரு பகுதி செல்லுபடியாகும் என்றும், இன்னொரு பகுதி எல்லாச் சாதியினரும் அர்ச்சகர்களாக நியமிக்கலாம் என்ற பகுதி செல்லுபடியாகாது என்றும் தீர்ப்பளித்தார்கள். அப்படித் தீர்மானிக்கப்பட்ட பிறகு நம்முடைய சட்டம் முழுமையாகச் செல்லுபடியாகும் சட்டமாக மாற்றப்பட வேண்டுமென்று, எல்லாச் சாதியைச் சேர்ந்தவர்களும் அர்ச்சகர்களாக வரவேண்டுமென்ற தகுதியைப் பெற வேண்டுமென்ற வகையில் தமிழ் நாட்டு முதலமைச்சர் அவர்கள் இந்திய நாட்டுப் பிரதம அமைச்சருக்கு 20—11—72-ஆம் நாளில் ஒரு கடிதம் எழுதினார்கள். அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர்களாக வரும் நிலைமை ஏற்பட்டால்தான் இந்த நாட்டில் சாதி ஒழிப்பை நாம் முழுமையாகச் செய்தவர்களாவோம் என்ற வகையில் உடனடியாக அரசியல் சட்டத் திருத்தம் செய்ய நடவடிக்கை எடுக்க வேண்டுமென்ற கருத்தை மையமாக வைத்து, நம்முடைய முதலமைச்சர் அவர்கள் இந்திய நாட்டுப் பிரதமருக்கு 20—11—72-ல் கடிதம் எழுதினார்கள். அதற்குப் பிறகு இரண்டு முறை நினைவூட்டுக் கடிதங்கள் எழுதிய பிறகும், கடந்த இரண்டு ஆண்டு காலமாக அரசியல் சட்டத்தைத் திருத்த எந்தவிதமான முயற்சியும் எடுக்காத காரணத்தாலும், பிரதம அமைச்சரோ மற்ற அமைச்சர்களோ அதற்கான முயற்சியை எடுக்காத காரணத்தாலும், பல்வேறு நேரங்களில் நாடாளுமன்ற உறுப்பினர்கள் வலியுறுத்திப் பேசியும் மத்திய அரசாங்கம் கவனம் செலுத்தாத காரணத்தாலும், இன்றைக்குத் தமிழ் நாட்டுச் சட்டமன்றத்தில் ஏகமனதாக ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி அரசியல் சட்டத்தைத் திருத்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்ற வகையில் இன்றைக்கு இந்தத் தீர்மானம் இங்கே கொண்டு வரப்பட்டு இருக்கிறது. சட்ட மன்றத்தில் இருக்கும்



உறுப்பினர்கள் அத்தனை பேரும், இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுகிற அதேநேரத்தில் சட்டமன்றத்திற்கு வெளியிலே அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர்களாக வரவேண்டும் என்று தமிழ் நாட்டு மக்களுடைய உள்ளத்தில் நீண்ட நாட்களாக இருந்து வரும் அந்த எண்ணம் இன்றைக்கு வெளிப்படையாக வந்து தமிழ்நாடு பூராவும் கிளர்ச்சி எழுகின்ற நிலைமை ஏற்பட்டிருக்கின்றது என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

சமீபத்தில் திராவிடர் கழகம் சார்பில் நடத்திய போராட்டமாக இருந்தாலும், அந்தப் போராட்டத்தில் குறிப்பிட்ட கட்சிக்காரர்கள் என்று மட்டுமல்ல, கட்சிக்கு அப்பாற்பட்டவர்களும், வேறு பல கட்சிகளைச் சார்ந்தவர்களும், அந்தப் போராட்டத்தை ஆதரித்து அந்தக் கிளர்ச்சியில் கலந்து கொண்டிருக்கிறார்கள். அதேபோல் தமிழ் நாட்டினுடைய மடாலயங்களின் பிரதிநிதியாகவும், இந்து மதத்தின் வளர்ச்சிக்கும், இந்து மதத்தினுடைய தத்துவம் தமிழ்நாடு பூராவும் பரப்பப்பட வேண்டும் என்று சொல்லி மேலவையில் இடம் பெற்றிருக்கிற தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்கூட அந்தக் கிளர்ச்சி மிக மிக நியாயமான கிளர்ச்சி என்று சொல்லிக் கிளர்ச்சி நடைபெற்ற நேரத்தில் அந்தக் கிளர்ச்சியை ஆதரித்துப் பத்திரிகைகள் எல்லாவற்றிற்கும் அவர்கள் அறிக்கை தந்திருக்கிறார்கள். அப்படி மக்களுடைய உள்ளத்தில் எல்லாம் இடம் பெற்று நிச்சயமாக ஜாதி ஒழிக்கப்படுவதற்கு இந்த அரசியலமைப்புச் சட்டம் நிச்சயம் திருத்தப்பட்டேயாக வேண்டும் என்று சொல்லி, மக்களிடையே அந்த எழுச்சியை உண்டாக்குகிற அந்த நிலைமையை நாம் இன்று கண்கூடாகப் பார்த்துக் கொண்டு இருக்கிறோம். இந்த நிலைமையில் மத்திய அரசு தாமதிக்காமல் தமிழ் நாட்டு மக்களுடைய நல்லெண்ணத்தைப் புரிந்து கொண்டு வெகு சீக்கிரத்தில் அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென்ற கருத்தை மேலும் வலியுறுத்தும் வகையில்தான் இந்தத் தீர்மானத்தை நாம் இங்குக் கொண்டு வந்திருக்கிறோம். அனைத்துக் கட்சித் தலைவர்களும் உறுப்பினர்களும் இந்தத் தீர்மானத்தை நல்ல முறையில் ஆதரித்து நல்ல கருத்துக்களை எல்லாம் வழங்கியிருக்கிறார்கள். அந்தக் கருத்துக்களைக் குறிப்பிடுகிற நேரத்தில் அர்ச்சகர்களாக இருப்பவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவர்கள் வந்தாலும், அவர்கள் தேவையான பயிற்சியைப் பெற்றிருக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தை வெளிப்படுத்தினார்கள். ஏற்கனவே இந்தச் சட்டம் செல்லுபடியாகும் என்று நினைத்துச் சில வசதிகள் உள்ள கோயில்கள் எல்லாம் அர்ச்சகர்களுக்குப் பயிற்சி கொடுக்கும் பள்ளிக்கூடங்களைத் திறப்பதற்குக் கூட அறநிலையத் துறை சார்பில் ஏற்பாடுகள் எல்லாம் செய்து வைத்திருந்தோம். பயிற்சி கொடுத்து அந்தப் பயிற்சியில் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள் மட்டுமே அர்ச்சகர்களாகக் கோவில்களில் பணியாற்ற வேண்டும் என்ற முறையில் அப்பள்ளிக்கூடங்களை உருவாக்க இருந்து அந்தச் சட்டத்தைச் செயல் முறைக்குக் கொண்டு வர முடியாத ஒரு நிலை ஏற்பட்ட பிறகு அந்தப் பள்ளிக்கூடம் திறப்பது தாற்காலிகமாக நிறுத்தப்பட்டிருக்கிறது. பயிற்சிப் பள்ளியில் சிறந்த முறையில் பயிற்சி கொடுத்து ஒவ்வொரு கோவிலிலும் இருக்கிற ஆகம விதிகளுக்குப் புறம்பாகாத வகையில் நிச்சயமாக அர்ச்சகர்களுக்குப் பயிற்சி கொடுத்து நியமிக்க வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் எதிர்காலத்தில் உருவாக்கலாம். மதிப்பிற்குரிய ஜோதி அம்மையார் அவர்களும், மதிப்பிற்குரிய மாரிமுத்து அவர்களும், மதிப்பிற்குரிய கே. டி. கே. தங்கமணி அவர்களும், அந்தக் கருத்தை வலியுறுத்திச் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே அந்தக் கருத்தை அரசு ஏற்றுக் கொண்டு எதிர்காலத்தில் அர்ச்சகர்களுக்காகப் பயிற்சிப் பள்ளிகளை ஏற்படுத்துவதற்கு அரசு நடவடிக்கைகள் எடுக்கும் என்பதைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். இதே போல் இந்தத் தீர்மானத்தை வரவேற்றுப் பல்வேறு நாடுகளில் உள்ள அரசியல் சட்டங்களில் இருக்கிற விதிமுறைகளை எல்லாம் நம்முடைய இந்திய கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் விளக்கமாக எடுத்துச் சொல்லி இந்தச் சட்டத்தை முழுமையாக ஆதரித்துத் தன் கட்சி சார்பில் கருத்துக்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதேபோல், காங்கிரஸ் கட்சி சார்பிலும், பார்வேர்ட் ப்ளாக் சார்பிலும் தலைவர்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். வரலாற்றுச் சிறப்புமிக்க இந்தத் தீர்மானத்தை எல்லாக் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்களும் ஆதரித்து இருப்பது உள்ளபடியே மத்திய அரசில் இருப்பவர்கள் இதுபற்றிக் கவனம் செலுத்துவர் என்று நாம் நம்பிக்கையோடு எதிர்பார்க்கிறோம். இந்தத் தீர்மானத்திற்குத் திருத்தம் ஒன்றை மதிப்பிற்குரிய உறுப்பினர் திரு. கே.எம். சுப்பிரமணியம் அவர்கள் தந்திருக்கிறார்கள். அதுபோல் திரு. சௌந்திரபாண்டியன் அவர்களும் ஒரு திருத்தத்தைத் தந்திருக்கிறார்கள். திரு. சௌந்திரபாண்டியன் அவர்கள் திருத்தம்பற்றி நம்முடைய சட்ட அமைச்சர் அவர்கள் ஏற்கனவே விளக்கமாகப் பதில் அளித்திருக்கிறார்கள். திரு. கே. எம். சுப்பிரமணியம் அவர்கள் கொடுத்திருக்கிற திருத்தம் இன்னும் சிறந்த முறையில் இருக்க வேண்டும் என்பதுதான். அதிலே உள்ளடங்கியிருக்கிற கருத்துக்கள் வெளிப்படையாகத் தெரிய வேண்டும் என்ற எண்ணத்தில்தான் சொல்லியிருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். மத சாஸ்திரங்களைக் கற்றவர்கள் என்றவார்த்தையைச்சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். நாங்கள் கல்வித் தகுதி என்று குறிப்பிடுவதானது மத சாஸ்திரங்களைக் கற்று உணர்ந்திருக்க வேண்டும் என்ற நோக்கத்தில்தான் கல்வித் தகுதி என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே மாதிரி பாரம்பரியமான முறைகளின் அடிப்படையில் பெரும்பாலான வழிபடுகிறவர்கள் கருத்தில் மனம், மொழி, வாக்கு, காயம் இவற்றில் தூய்மையானவர்கள் என்று கருதப்படுகிறவர்கள்தான் நியமிக்கப்பட வேண்டும் என்ற கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள். அந்த அளவிற்கு வழிபடுகிறவர்களின் எண்ணத்தைத் தெரிந்து தேர்ந்தெடுப்பது என்பது இயலாத காரியம். ஆனால் கோவில்களில்

அர்ச்சகர்களாகப் பணியாற்ற என்னென்ன தகுதிகள் வேண்டுமோ—நல்ல தகுதிகள், குண நலங்கள், இருந்தாலும் எந்த வழிகளில் எல்லாம் வந்திருக்கிறார்கள் என்பதையெல்லாம், அந்தத் தகுதிகளை எல்லாம் ஆராய்ந்து பார்த்துத்தான் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அதே மாதிரி கோவில்களில் பூசாரிகளாக அல்லது அர்ச்சகர்களாகப் பயிற்சி கொடுக்கும்போது, கோவில்களில் பணி புரிய எந்த உணர்வுகள் எல்லாம் இருக்க வேண்டுமென்று மற்றவர்கள் கருதுகிறார்களோ, அந்த அளவிற்குப் பயிற்சி கொடுப்பது எதிர்காலத்தில் செய்யப்படும். ஆகவே அவர்கள் வேண்டுமென்று விரும்புகிற அத்துணை கருத்துக்களும் ஏற்கனவே இருக்கிற காரணத்தால் அவர்களும் இந்தத் திருத்தத்தை வலியுறுத்தாமல் ஏகமனதாக இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றித் தர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். என்றைக்கு இந்தத் தீர்மானத்தை முழு மனதோடு ஏற்று மத்திய அரசு அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கு முன்வருகிறார்களோ அன்றைக்குத்தான் தமிழ் நாடு மட்டுமல்ல, மகாத்மா காந்தி அடிகள் சொன்ன கொள்கையாக இருந்தாலும், தந்தை பெரியார் அவர்களும், பேரறிஞர் அண்ணா அவர்களும் கடந்த நாற்பது ஆண்டு காலமாகத் தமிழ் நாட்டு மக்களின் மறுமலர்ச்சிக்காக மட்டும் அல்லாது இந்த நாட்டில் இருக்கிற ஏற்றத் தாழ்வினை ஒழிப்பதற்காகப் பாடுபட்டார்களோ அந்தக் கொள்கை வெற்றியடைவதற்கு அரசியல் சட்டம் திருத்தப்பட்டு, சாதாரண தாழ்ந்த குடியில் பிறந்த ஒருவராக இருந்தாலும் அல்லது பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும் சரி, ஜாதி வேற்றுமை இல்லாத வகையில் யார் வேண்டுமானாலும், தகுதி படைத்தவர்கள் யார் வேண்டுமானாலும் கோவிலுக்கு அர்ச்சகர்களாகப் போகலாம் என்ற நிலைமை ஏற்படும்போதுதான் நிச்சயமாக ஜாதி ஏற்றத் தாழ்வும் இந்த நாட்டில் இருந்து ஒழிக்கப்பட்ட நாளாகும். ஆக இந்தத் தீர்மானத்தை இந்த மாமன்றமும் இந்தத் தமிழ் நாட்டு மக்கள் அத்துணைப் பேர்களும் மனப்பூர்வமாக ஏற்கிறார்கள். மத்திய அரசு உரிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்தத் தீர்மானத்தை ஆதரித்து நல்ல கருத்துக்களைக் கூறியுள்ள அத்துணை உறுப்பினர்களுக்கும் நன்றி கூறி இந்த அளவோடு அமைகிறேன்.

## சட்டப் பேரவையின் தீர்மானம்

* ''சாதி, பிரிவு, உட்பிரிவு ஆகியவற்றின் அடிப்படையில், இந்து சமய நிறுவனங்களில் அர்ச்சகர்களையும், பூசாரிகளையும் ஏனைய உள் துறை ஊழியர்களையும் பரம்பரை முறையில் நியமனம் செய்யும் நடைமுறைபற்றிப் பொது மக்கள் பரவலாகக் குறைபாடு கூறுதல் இருப்பதாலும் ;

இந்து சமூகத்தில் நிலவும் பரம்பரை முறையில் சமயப் பூசாரிகளை நியமிக்கும் முறை நீக்கப்பட வேண்டுமென்றும், இதற்குப் பதிலாக சமயச் சார்புள்ள நிறுவனம் ஒன்று அமைக்கப்பட வேண்டுமென்றும், தேவையான கல்வித் தகுதிகள் உள்ளவர்கள், ஏற்பளிக்கப்பட்ட நிறுவனங்களில் பூசாரிக்குரிய பணிகளில் பயிற்சி அளிக்கப்பட வேண்டும் என்றும், சாதி இனம் இல்லாது வகுப்பு வேறுபாடின்றி அனைவருக்கும் பூசாரிகளாக நியமிக்கப்படுவதற்கான வாய்ப்பு அளிக்கப்பட வேண்டுமென்றும், ''தீண்டாமை, அரிசனங்களின் பொருளாதார, கல்வி வளர்ச்சி குறித்த குழு'' கருத்துத் தெரிவித்துள்ளதாலும் ;

உச்ச நீதிமன்றத்தால் பொருள் விளக்கம் கூறப்பட்டுள்ளவாறு, அரசியலமைப்பில் தற்போதுள்ள விதித் துறைகளின் கீழ், கோயில்களுக்குப் பொருந்துகிற ஆகமங்களில் குறிப்பிட்டுள்ள கட்டளைகளை யொட்டிக் குறிப்பிட்ட பிரிவு அல்லது உட்பிரிவுகளிலிருந்து அர்ச்சகர்களையும், பூசாரிகளையும் நியமிக்க வேண்டும் ; அவ்வாறு செய்யத் தவறினால் சமயக் கோட்பாடுகளில் தலையிடுவதாகுமென்பதாலும் ;

சமூக சீர்திருத்த நடவடிக்கையாக, சாதி, பிரிவு அல்லது உட்பிரிவு வேறுபாடின்றி இந்து சமயத்தைச் சேர்ந்த தகுதியுள்ளவர்களிடையே இருந்து அர்ச்சகர்கள், பூசாரிகள் அல்லது ஏனைய உள் துறை ஊழியர்கள் இந்து சமய நிறுவனங்களில் நியமிக்கப்பட வேண்டுமென்று இந்த அவை கருதுவதாலும் ;

மேற்சொன்ன நோக்கத்துக்காக இம் மாநில சட்ட மன்றம் சட்டமியற்ற இயலும் வகையில் அரசியலமைப்பு தக்கவாறு திருத்தப்பட வேண்டுமென்பதாலும் ;

சட்ட வரைவில் குறிப்பிட்டுள்ளபடி அரசியலமைப்பைத் தக்கவாறு திருத்துவதற்குத் தேவையான சட்டமொன்றை இயற்றுமாறு மத்திய அரசைக் கேட்டுக் கொள்வதென இப் பேரவை தீர்மானிக்கிறது.'' *

---

இத் தீர்மானத்தின் மீது சட்டப் பேரவையில் நிகழ்ந்த விவாதத்திற்குப் பதிலளித்து மாண்புமிகு முதலமைச்சர் அவர்களும், மாண்புமிகு அறநிலைய அமைச்சர் அவர்களும் ஆற்றிய உரைகள் ''திரை விலகியது'' ''அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும்'' எனும் தலைப்புகளில் இங்கு வெளியிடப்பட்டிருக்கின்றன.

# இறைவழிபாடு

திருமுருக கிருபானந்தவாரியார்



**இறைவன் :**

எங்கும் நிறைந்தவன் இறைவன். இறை என்ற சொல் 'இறு' என்ற பகுதி அடியாகப் பிறந்தது சரம் அசரம் என்ற எல்லாப் பொருள் களிலும் தங்கியிருப்பவன் இறைவன்.

''பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணனந்தமே''

''அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்தபூர்த்தியாகி அருளொடு நிறைந்தது''

உடம்பிலே உயிரும், உயிரிலே இறையும் தங்கியிருக்கின்றன. உதை பந்து ; 'பந்துக்குள் பிளாடர்' அதற்குள் காற்று என்பது போல் எல்லாப் பொருள்களையும், எல்லா உயிர்களை யும் இயக்குகின்றதனுல் அப் பரம் பொருள் இயவுள் எனப் பேர் பெற்றது. ''பெரும் பெயர் இயவுள்'' என்பார் நக்கீரர். எல்லா வற்றையும் கடவுவதனுல் கடவுள் எனவும் பேர் பெற்றது.

ஒரு மருத்துவ மனையில் மருத்துவர் தங்கி யிருப்பதன் நோக்கம், அம் மருத்துவ மனையில் உள்ள பிணியாளர்களின் பிணிகளைப் போக்கு வதே யாகும். அதுபோல், இறைவன் எல்லா உயிர்களிலும் தங்கி அவ்வுயிர்களின் பிறவிப் பிணியைப் போக்குகின்றனன்.

''உள்ளொடு புறங்கீழ் மேலாய்
உயிர்தொறும் ஒளித்து நின்ற கள்வன்''

என்பார் பரஞ்சோதி முனிவர்.

''அண்டமும் அளவிலாத உயிர்களும் ஆகமாகக்
கொண்டவன்''

என்பதும் இவருடைய திருவாக்கு.

இன்னணம் இறைவன் எங்கும்இருப்பினும் ஞானிகள் திருவுள்ளத்திலும், திருக்கோயில்களி லும் சிறப்பாக விளங்கித் தோன்றுகின்ருன். ஏனைய இடங்களில் இறைவன் மறைந்திருக்கி ருன்.

''ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே''

—மாணிக்கவாசகர்.

பாலில் நெய் மறைந்திருப்பதுபோல், பிற இடங்களில் இறைவன் நிறைந்து மறைந்திருக் கின்ருன். கடைந்த தயிரில் வெண்ணெய் திரண்டு உருண்டு வெளிப்பட்டிருப்பது போல் ஞானிகள் உள்ளத்திலும், திருக்கோயிலிலும் இறைவன் விளங்கிக் காட்சியளிக்கின்ருன்.

மற்ற இடங்களில் இறைவனை நினைந்து தியானிப்பதனுலும், துதிப்பதனுலும் வழிபடுவ தினுலும் வினைகள் வெதும்புகின்றன. கோயி லில் இறைவனை வழிபட்டால், வினைகள் வெந்து எரிந்து, கரிந்து நீருகி விடுகின்றன. கொடிய வெய்யிலில் ஒரு துணியை வைத்தால் அத்துணி வெதும்புமே யன்றி வெந்து சாம்பராகாது. சூரிய காந்தக் கண்ணுடியை வெய்யிலில் வைத்து, அதன் கீழ் வரும் மற்றெரு வெய்யி லில் துணியை வைத்தவுடனே அத்துணி சாம்ப ராகி விடுகின்றது. நேர் வெய்யிலுக்கு இல்லாத ஆற்றல், சூரிய காந்தக் கண்ணுடியின் கீழே வருகின்ற வெய்யிலுக்கு உண்டு.

பரந்து விரிந்து இருக்கின்ற கதிரவனுடைய வெப்பத்தை ஒன்றுபடுத்தித் தன் கீழே சூரிய காந்தக் கண்ணுடி பாய்ச்சுகின்றது. பிற இடங் களில் இறைவனை வழிபடுவது வெய்யிலில் வேட்டியை வைப்பது போலாகும். திருக்கோயி லில் இறைவனை வழிபடுவது சூரிய காந்தக் கண்ணுடியின் கீழ் வைப்பது போலாகும். ஆதலால் திருக்கோயில் வழிபாடு இன்றியமை யாததாகும்.

''மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன்எனத் தொழுமே''

என்பது சிவஞான போதம்.

திருக்கோயில்களிலுள்ள திருவுருவங்கள் தேவர்களாலும், முனிவர்களாலும் நால்வர், ஆழ்வார்கள் ஆகிய ஆன்ருேர்களாலும் நிறுவப் பெற்ற காரணத்தால் அவை மேன்மை பெற்று வழிபடுவோருடைய வல்வினைகளை அகற்றிவேண் டிய வரங்களை வழங்கி அருள் புரிகின்றன.

பசுவின் உடல் முழுவதும் பால் பரவியிருந் தாலும் மடியின் மூலமாக அதனைப் பெறுவது போல், எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவனு டைய திருவருளைத் திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்கள் மூலமாக நாம் பெறுதல் வேண் டும். ஒரு பறவை இரு சிறகுகளைக் கொண்டு

பறப்பது போல், இறை வழிபாட்டிற்குப் பூவும் நீரும் வேண்டப்படுகின்றன.

''அன்புடன் ஆசார பூஜை செய்து
உய்ந்திட வீணுள் படாது அருள்புரிவாயே''

என்பது திருமந்திரம். எங்கும் நிறைந்த இறைவனை எங்கும் எளிதாகக் கிடைக்கக் கூடிய பூவினாலும், நீரினாலும் நாம் வழிபட வேண்டும். வழிபாட்டிற்கு அன்பும், ஆசாரமும் இரண்டு கண்கள் போன்றவை.

வில்வக் கிளையுதிர்த்த வெய்ய முசுக்கலையைச்
செல்வத் துரை மகனுய்ச் செய்தனையே

—திருவருட்பா.

என்று அருணகிரிநாத சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றார்.

திருக்கயிலாய மலையில் பார்வதி பரமேசுவரர் மீது, விளையாட்டாக வில்வக் கிளையை உதிர்த்த குரங்கு அபுத்தி பூர்வமாகச் செய்த அச்சிவ புண்ணியத்தால் பூவுலகில் பிறந்து, முசுகுந்தச் சக்கரவர்த்தி என்ற பெயருடன் மூவுலகும் ஆண்டது.

இறைவழிபாடு செய்து மார்க்கண்டேயர் மறலியை வென்ற வரலாறு உலகம் அறிந்த ஒன்று. ஆத்ம சோதியில் அருட்சோதி சூழச் சிவசோதி விளங்குகின்றது. ஆத்ம சோதி — வட்டமாகிய கல். அருள் சோதி—சூழ்ந்திருக்கின்ற ஆவுடையார். சிவ சோதி —மேல் நோக்கிய இலிங்கம். இதுதான் சிவலிங்கத்தின் உண்மை. ''சோதியுள் சோதியுள் சோதி'' என்பார் இராமலிங்க அடிகளார்.

கோயில் ஐந்து பிராகாரங்களோடு கூடியது. இந்த உடம்பே இறைவன் இருக்கின்ற திருக்கோயில். இந்த உடம்பும் அன்னமய கோசம் பிராணமய கோசம் மனோமய கோசம் விஞ்ஞான மய கோசம் ஆனந்தமய கோசம் என்ற பஞ்ச கோசங்களையுடையது.

உடம்பில் 32 கட்டுக்களோடு கூடிய முதுகுத் தண்டே திருக்கோயிலில் கொடிமரமாகக் காட்சி யளிக்கிறது. கொடி மரத்தில் கொடி ஏறியவுடன் இறைவன் வெளியே வந்து காட்சி யளிக்கின்றான். அதுபோல், முதுகெலும்பாகிய வீணா தண்டத்தில் வளைந்து செல்லுகின்ற சுழு முனை என்ற வெள்ளை நரம்பின் வழியாகப் பிராணவாயு ஆறுதாரங்களையும் கடந்து, பிரமரந்திரத்தைத் தாண்டி சகஸ்ரார வெளியிலே சென்றவுடன் சிவசோதி காணப்படும்.

திருக்கோயிலில் விளங்கும் பத்திர இலிங்கமாகிய பலி பீடம் பாசத்தையும், நந்தி தேவர் பசுவையும்; சிவலிங்கம் பதியையும் குறிப்பிடுகின்றன. நமது சரீரத்தில் உள்ள மூலாதாரமும், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையும் கோயிலில் உள்ள யாக மண்டபம், அலங்கார மண்டபம், கல்யாண மண்டபம், நிருத்த மண்டபம், மகா மண்டபம், அர்த்த மண்டபம் என்ற மண்டபங்கள் தெரிவிக்கின்றன. எனவே, திருக்கோயிலில் சென்று இறைவனை வழிபட்டு அங்கே கண்ட பரம்பொருளை நம் உடம்புக்குள்ளேயும் கண்டு மனோலயம் பெற வேண்டும்.

''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே''

—திருமந்திரம்.

கட்டையில் கனல் மறைந்திருக்கின்றது. ''விறகிற் றீயினன்'' என்கின்றார் அப்பர் பெருமான். கட்டையைக் கடைந்தவுடன், அதில் மறைந்த கனல் வெளிப்பட்டுக் கட்டை கனலாகக் காட்சி யளிப்பது போல், உயிரில் ஒளிந்திருக்கின்ற இறைவனை ஞானத்தால் கடைவோமாயின் சிவம்வெளிப்பட்டுச் சீவனைச்சிவமாக்கிக் கொள்ளுகிறது. எண்ணில் காலமாக எண்ணில்லாத உடம்பு எடுத்து வருகின்ற நாம், இறைவனை மெய்யன்புடன் உள்ளம் குழைந்து உருகி மலரிட்டு அருச்சனை செய்து வழிபட்டால் பிறவி நோய் தீரும்.

''கன்றெடுத்து விளவெறிந்து காலெடுத்த
மழைக் குடைந்த காலி காக்கக்
குன்றெடுத்த மால்விடையின் கொடுயெடுத்து
வடிவெடுத்துக் கூறொணாத
மன்றெடுத்த சேவடியின் மலரெடுத்துச்
சாத்தியபின் வழிபட்டோர்கள்
இன்றெடுத்த வுடற்பிறவி யினியெடா
வண்ணமெண்ணம் எய்துவாரே''

—சிவரகசியம்.

## தெய்வம் ஒன்று !

திருக்கோயில்களில் சிவ லிங்கம், தட்சிணா மூர்த்தி, நடராசர், சந்திர சேகர, அம்பிகை, விநாயகர், முருகர், திருமால் என்ற பல மூர்த்திகள் இருப்பினும், அவைகள் அனைத்தும் ஒரே மூர்த்திதான்.

நெருப்பு—சிவபெருமான். நெருப்பில் உள்ள சூடு — அம்பிகை. நெருப்பில் உள்ள செம்மை நிறம்—விநாயகர். நெருப்பில் உள்ள ஒளி—முருகப்பெருமான்

''சுடரோ சிவபெருமான் சூடுபரா சக்தி
திடமார் கணநாதன் செம்மை—படரொளியோ
கந்தவே ளாகும் கருதுங்கால் சற்றேனும்
வந்ததோ பேத வழக்கு''

மலர்—சிவபெருமான். மலரின் வடிவம் —அம்பிகை. மலரின் நிறம்—கணபதி. மலரின் மணம்—மயிலவன். நூல்—சிவபெருமான். நூலின் அகலம்—பார்வதி. நூலின் நீளம் — கணேசர். நூலின் கனம்—குமாரக் கடவுள்.

சிவபெருமானுடைய சக்திகள் நான்கு : அருள் சக்தி, போர் சக்தி, கோப சக்தி, புருட சக்தி.

அருள் சக்தி — பார்வதி. போர் சக்தி — காளி. கோப சக்தி — துர்க்கை. புருட சக்தி — விட்டுணு.

''அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே'' என்பது அப்பர் வாக்கு. முக்கண்ணன்—முக்கண்ணி ; சங்கரன்—சங்கரி; திரிபுர சுந்தரன்—திரிபுர சுந்தரி என்பது போல், அரன்—அரி என வந்தது. ஆகவே திருமாலின் வழிபாடும் அம்பிகையின் வழிபாடும் ஒன்றென உணர்க.

திருக்கோயில்களில் காட்சியளிக்கும் துவாரபாலகர்களில் ஒருவர் ஆள்காட்டு விரலைக் காட்டி நிற்பது உள்ளே வழிபடச் செல்வோருக்குக் கடவுள் ஒன்றே என்பதை அறிவுறுத்துகிறது. மற்றொரு துவாரபாலகர் ஒரு கையை விரித்துக் காட்டுவது, கடவுள் ஒன்றைத் தவிர வேறொன்றில்லை என்பதை உணர்த்துகிறது. இதையே ''ஏகம் ஏவ அத்விதீயம் பிரமம்'' என்று வேதம் கூறுகின்றது. கடவுள் ஒன்றே தான்; இரண்டாவது இல்லை என்பது இதன் பொருள். எனவே தெய்வ வழிபாடு செய்வோர் தெய்வ பேதம், மூர்த்தி பேதம் குறித்து மாறுபட்டு மலையாது நிலையாய அன்புடன் ஒரு பொருளைத் தியானித்து வழிபட வேண்டும்.

''யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்''

—சிவஞானசித்தியார்.

''ஆரொருவர் உள்வார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்''

—அப்பர்.

ஒரு காகிதத்திற்கு இரண்டு பக்கங்கள் இருப்பது போல், தெய்வத்திற்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று தட்பம் ; மற்றொன்று வெப்பம். வெப்பமும் தட்பமும் சமமாக இருந்தால்தான் மலர் மலராகக் காட்சியளிக்கும். வெப்பம் மிகுந்தால் மலர் வாடும்; தட்பம் மிகுந்தால் மலர் அழுகும்.

இந்த உடம்பும் சீதோஷ்ணத்தால் தான் வாழ்கின்றது. ஒரு சமயம் இந்த உடம்பில் சூடு குறையுமானால் சுற்றத்தார் சூழ்ந்து கொள்வார்கள். மருத்துவர் வந்து ''Too late'' என்று கூறி, 'அவர் விரும்பியதெல்லாம் கொடுங்கள்'' என்று சொல்லுவார். ஆகவே, உலகிற்கு வெப்பமும் தட்பமும் இன்றியமையாதவை. வெப்பத்தின் நுண்மை சிவம். தட்பத்தின் நுண்மை திருமால். வெப்பத்தின் நிறம் சிவப்பு. தட்பத்தின் நிறம் பச்சை. எனவே சிவமூர்த்தி பவளம் போல் மேனியன். திருமால் பச்சை மா மலைபோல் மேனியன். சிவம் அனல் ஏந்தி விளையாடுகின்றது. திருமால் ஆழியிடைத் துயிலுகின்றார். சிவாலயத்தில் வெந்த நீற்றையும், திருமால் கோயிலில் தீர்த்தப் பிரசாதத்தையும் வழங்குகின்றார்கள்.

பாதி சிவம். பாதி திருமால். இந்தத் தத்துவத்தைச் சிவமூர்த்தங்கள் இருபத்து ஐந்தனுள் கேசவார்த்த மூர்த்தம் என்பது தெரிவிக்கின்றது. சங்கர நாராயணர் கோவிலும் இதற்குச் சான்று.

''தாழ்சடையும் நீள்முடியும் ஒள்முழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால்—வீழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்
கிரண்டுருவும் ஒன்றாய் இசைந்து''

என்று ஆழ்வார் கூறுகிறார்.

சிதம்பரம், திருநெல்வேலி, காஞ்சிபுரம், திருக்குற்றாலம், திருவருணை முதலிய திருத்தலங்களில் உள்ள சிவாலயங்களில் திருமாலும் காட்சி தருகின்றார்.

## ஏன் வணங்க வேண்டும் ?

நம்மிடைப் பலருக்கும் இறைவனை ஏன் வணங்க வேண்டும்? வணங்காவிடில் என்ன? மனித வாழ்வில் இறையுணர்ச்சி இல்லாமல் வாழ முடியாதா? நாம் வணங்காவிடில் கடவுளுக்கு என்ன நட்டம்? என்ற வினாக்கள் உள்ளுணர்வில் எழுவது இயல்பு. இவைகளுக்கு விடை காண முயல்வது முறை.

விலங்குகளும் உண்ணுகின்றன ; உலாவுகின்றன ; வம்சத்தை வளர்க்கின்றன. மனிதர்களாகிய நாமும் உண்ணுகின்றோம் ; உலாவுகின்றோம் ; மக்களைப் பெறுகின்றோம். இவை விலங்குகட்கும் மனிதர்கட்கும் ஒன்றாகவே அமைந்திருக்கின்றன. விலங்குகளினின்றும் மனிதன் உயர்ந்து காட்சியளிப்பது தெய்வ உணர்ச்சி ஒன்றாலேயேதான்.

ஒரு கானகத்தில் விலங்குகளின் மாநில மாநாடு கூடிற்று. அதில் தலைமை தாங்கிய சிங்கம் ''விலங்குத் தோழர்களே! உயிர் வாழ்க்கைக்கு ஆடை அவசியமா? மனிதர்கள், ஆடைக்கு அவசியமின்றி அதிகம் செலவழிப்பது அறிவின்மையாகும். அது வருந்தத்தக்கது'' என்று கூறிற்று. இதுபோல் மனித வாழ்க்கைக்குக் கடவுள் வணக்கம் தேவையா? நாங்கள் கடவுளை வணங்காமல் வாழவில்லையா? என்று வினவுவார்கள். மானம் உள்ளவன் ஆடை உடுப்பான். மனம் உள்ளவன் இறைவனை வணங்குவான்.

மனிதன் செய்கின்ற பாவங்களுக்கெல்லாம் கழுவாய் உண்டு. நன்றி கொன்ற பாவத்திற்கு மட்டும் கழுவாய் இல்லை.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' —திருக்குறள்.

''ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்
மாணிழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமையோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளஎன
நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்தி கொன்றார்க்கு உய்தி இல்லென
அறம் பாடிற்றே''

—புறநானூறு, 34.

எனவே, கழுவாய் இல்லாத பாவம் நன்றி தோறல் ஆகும். இதற்கு நேர் மறுதலையாக சிறந்த புண்ணியம் நன்றி மறவாமையாகும். இந்த உடம்பையும், உடம்பின் உறுப்புக்களை யும், உள்ளுறை கருவி காரணங்களையும் தந்த வன் இறைவன். கண்ணைக் கொடுத்த இறை வன் கண் தூசுபட்டு மங்காமல் இருக்கும் பொருட்டு, கண்ணிற்குக் கதவு போல் இமை யும் கொடுத்தான். அந்த இமையின் நுனியில் உரோமங்களையும் அமைத்தான். உணவு உண்ணு ணுகின்ற வாயில் உணவைத் துகள் படுத்த (Flour Mill) பற்களையும் கொடுத்தான். வாய்க் குள் நுழைகின்ற பொருள்கள் நல்லனவா? அல் லனவா? என்று சோதித்து உள்ளே அனுப்ப வாய்க்கு நேராக இரண்டு காவற்காரர்களைப் போல் இரு நாசிகளை அமைத்தார். உண்ணு கின்ற உணவைப் பல் மெல்லவும், நாவில் நீர் ஊறவும் அமைத்தார். நம்முடைய உடம்பில் எல்லா அவயவங்களிலும் நரம்புகள் உள. நாவில் மட்டும் நரம்புகள் இல. ஏனோ?

நரம்புள்ள பகுதிகள் சுளுக்கிக் கொள்ளும். நாவில் நரம்பு வைத்திருந்தால் ஒரு நாளுக்கு நூறு முறையாவது சுளுக்கிக் கொள்ளும். விளக் கெண்ணெய் தடவி உருவ வேண்டிவரும். இறைவன் கருணையினால் இடையறாது பேசுகின்ற நாவை நரம்பின்றிப் படைத்துக் கொடுத்தான். அவன் கொடுத்த நாவினால் அவனுடைய நாமங் களைச் சொல்லுதல் நன்றி பாராட்டுதலாகும். அவன் கொடுத்த தலையினால் அப் பரமபிதாவை வணங்குதல் நன்றிக் கடனும். வடமொழியில் காலையும் மாலையும் கடவுளை வணங்குவதைச் சந்தியாவந்தனம் என்பார்கள். சம்-செவ்வை யாக, தியா-தியானித்து, வந்தனம்-வணங்கு வது, சந்தியாவந்தனமாகும். இந்தச் சொல்லைப் பார்க்கினும் ஒரு கோடி மடங்கு பொருளாழம் உள்ளதாகக் கடவுளை வணங்குவதற்குக் காலைக் கடன், மாலைக்கடன் என்று தமிழில் ஆன்றோர் கூறினர். கொடுத்த கடனைத் திருப்பிக் கொடா தது எத்துணைப் பெரிய பாபமாகுமோ, அத் துணைப் பெரிய பாபமாகும் இறைவனை வணங் காதிருத்தல். ''என் கடன் பணி செய்து கிடப் பதே'' என அப்பர் பெருமான் குறிப்பிடுகின் றார்.

கருணையே வடிவாகிய இறைவன் உயிர் களின் மீதுள்ள இரக்கத்தினால் இந்த உடம்பை வழங்கினான் என்பதை முன்னர் அறிந்தோம். அவன் தந்த உடம்பினால் அவனை வழிபடுவது கடமையாகும். இன்றேல் கடமையை மறந்த மடமையாகும். காவிரியில் ஒருவன் நீராடுவது காவிரிக்கு நன்மை விளையும் பொருட்டன்று. தன் உடம்பிலுள்ள வெப்பம் தணியும் பொருட்டுக் காவிரியில் நீராடுகின்றான். அது போல் அருட் கடலாயிருக்கிற ஆண்டவனை வழி பட்டால் நம்முடைய பிறவி வெப்பம் தணி கின்றது.

''ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும்
தீர்த்தன் நற்றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும்
கூத்தன்''

என்று மாணிக்க வாசக சுவாமிகள் திருவெம் பாவையில் அருளிச் செய்கின்றார்.

ஆதலின் அப்பர் பெருமான் இறைவன் நமக்குத் தலை முதலிய கருவிகள் தந்தான் என்று தெரிவித்து விட்டு, அக் கருவிகளை நோக்கி இறை வழிபாடு செய்யுங்கள் என்றும் அருளிச் செய்கின்றார்.

வாழ்த்த வாயும் நினைக்கமட நெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே

''தலையே நீ வணங்காய்—தலைமாலைதலைக்கணித்து
தலையாலே பலி தேரும் தலைவனைத்
தலையே நீ வணங்காய்''

உடம்பின் பயன் இறைவனை வணங்குவ தாகும். அறிவின் பயன் இறைவனை அறிவ தாகும். கல்வியின் பயன் கடவுளைத் தொழுவ தாகும்.

''கற்றதனாலாய பயன் என்கொல்? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''.

—திருவள்ளுவர்.

''சென்றது காலம் சிதைந்த(து) இளமைநலம்
நின்றதுசா வென்று நினைந்துருகி—மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணர் நாமமெண்ணா மாந்தர்
படிக்கின்ற நூல்எல்லாம் பாழ்''

—அதிவீரராமபாண்டியர்.

இறைவனுடைய திருவடியில் அன்பில்லா தவர் கல்வியின் பெருக்காலும், குலத்தின் முறுக் காலும் நன்மையடைய மாட்டார்.

''கற்றதனாற் றொல்வினைக் கட்டறுமோ நல்லகுலம்
பெற்றதனாற் போமோ பிறவிநோய்—உற்றகடல்
நஞ்சுகந்து கொண்டருளை நாதனடித் தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி''

—அருணகிரியந்தாதி.

ஆதலால், மனிதப் பிறப்புக்கு இறை வழி பாடு இன்றியமையாதது என உணர்க. ஒரு மாவட்டத்திற்கும் மற்றொரு மாவட்டத்திற்கும் அரசாங்கத்தார் ஓர் எல்லைக் கல் அமைத்திருப் பது போல்,விலங்குகட்கும் மனிதனுக்கும்இடை யில் இட்ட எல்லைக் கல் இறை வழி பாடாகும். இறை வழிபாடு இல்லாத மனிதன் விலங்கென வும், இறைவழிபாடு செய்கின்ற விலங்கு தேவன் எனவும் உணர்க.

திருச்சிராப்பள்ளிக்கு அருகில் எறும்பு வழி பட்ட திருவெறும்பூரும், யானை வழிபட்ட திரு வானைக்காவும் காட்சி தருகின்றன. எறும்பு முதல் யானை ஈறாக எல்லாவுயிர்களும் இறை வனை வழிபட வேண்டும் என்பதும் போதரு கின்றது.

எறும்பு கடை யானைதலை ஈசனைப்பூ சித்துப்
பெறுங்கதிகண் டுந்தேறார் பேய்கள்—அறிந்த
உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப்படும்.

—முதுமொழிமேல் வைப்பு.

### வழிபடும் முறை

கோயிலில் வழிபடுவோர் நீராடி, தூய ஆடை அணிந்து, சமயச் சின்னங்கள் தரித்து, அன்புடனும் ஆசாரமுடனும் கோயிலுக்குச் செல்லுதல் வேண்டும். கொடி மரத்திற்கு

வெளியே விழுந்து வணங்குதல் குற்றம். விநாயகரை ஒரு முறையும், சிவமூர்த்தியை மூன்று முறையும், அம்பிகையை நான்கு முறையும் வலம் வருதல் வேண்டும்.

கோயிலில் ஒருமைப்பட்ட மனத்துடன் வழிபாடு செய்ய வேண்டும். கோயிலில் வழிபடுவோர் வீண் வார்த்தைகள் பேசுவதும், எச்சில் துப்புதலும், பிற தீமைகள் செய்தலுங் கூடா. அர்ச்சகர் தரும் விபூதி, பிரசாதங்களைப் பய பக்தியுடன் இரு கரங்களாலும் ஏந்திப் பெறுதல் வேண்டும். பெற்ற பிரசாதத்தைக் கீழே சிந்துதலும், ஒரு புறத்தில் எறிவதும் பெரும் பாவமாகும். சண்டேசுவரர் மீது நூல் இடுவதும், சிவலிங்கத்திற்கும் நந்திதேவருக்கும் இடையே போவதும் குற்றமாகும்.

கோயிலில் பிரசாதங்களை உண்டு கோயில் தூண்களில் துடைப்பது அனுசிதமாகும். கோயிலில் படுத்து உறங்குவோர் மறுபிறப்பில் மலைப்பாம்பாகப் பிறப்பார்கள். வழிபாடு முடிந்த பின் கொடி மரத்தின் அருகிலிருந்து வட திசை நோக்கி அமர்ந்து மூல மந்திரம் செபிக்க வேண்டும். நன்கு இனிமையாகத் தோத்திரப் பாடல்களை அதிக சப்தம் போடாமல் இனிய குரலில் துதிக்க வேண்டும். கோயில் விளக்குகளில் எண்ணெய் இடுதல் வேண்டும்.

''விளக்கிட்டார் பேறுசொல்லில் மெய்ந்நெறி ஞானமாகும்''—அப்பர்.

''நீளுகின்ற நெய்யருந்த நேரெரிலியை மூவுலகும்
ஆளுகின்ற மன்னவனாய் ஆக்கினையே''

—திருவருட்பா.

கோயிலில் அணைகின்ற விளக்கை அபுத்தி பூர்வமாகத் தூண்டிய எலி, பலிச் சக்கரவர்த்தியாகப் பிறந்து புகழ் பெற்றது.

### வீட்டு வழிபாடு

இனி நாள்தோறும் குடும்பத்தில் உள்ளோர் அனைவரும் ஒன்றுகூடிக் காலை அல்லது மாலையில் வழிபட வேண்டும். வீட்டுத் தலைவன் ஒரு பாடலைச் சொல்ல, ஏனையோர் அதனை வழிமொழிந்து சொல்ல இறைவனைக் காதலுடன் வழிபாடு செய்ய வேண்டும். இதனால் குடும்பத்தில் ஒற்றுமை உண்டாவதுடன் அந்த வீட்டில் தெய்வ கடாட்சமும் திருமகள் விலாசமும் உண்டாகும்.

### கூட்டு வழிபாடு

ஒரு தனி இழையை எளிதில் அறுத்து விடலாம். பல இழைகள் ஒன்றுபட்டுத் திரிந்த கயிறு (வடம்) தேரை இழுத்துவிடும். அது போல, பல அன்பர்கள் வாரத்திற்கொரு நாள் கோயிலில் ஒன்றுபட்டுக் கூட்டு வழிபாடு செய்தால் திருவருளை ஈர்த்து விடலாம். முஸ்லீம் அன்பர் தினம் ஒன்றுக்கு ஐந்து வேளை தவறாமல் தொழுவதும், கிறித்தவ அன்பர்கள் ஞாயிறு தோறும் ஆண் பெண் அடங்கலும், தங்கள் தேவாலயத்திற்குச் சென்று நியதியாகத் தொழுவதுபோல், இந்துக்களாகிய நாம் குறிப்பிட்ட நாட்களில் ஆங்காங்குள்ள ஆலயங்களில் நியதியாக வழிபடுவது மிக மிக அவசியம். அண்ணல் காந்தியடிகள் இறுதியாகப் பிரார்த்தனைக் கூட்டம் நாள்தோறும் நடாத்தி முடிவில் பிரார்த்தனைக் கூட்டத்திலேயே ஆத்ம சாந்தியடைந்தார். ஆதலால் அன்பர்கள் காதலாகிக் கசிந்து கடவுளை வழிபட்டு இகபர நலன்களை எளிதில் பெறுதல் வேண்டும். இறைவழிபாடு செய்து பிறவிப் பிணியை ஒழித்துப் பேரின்பப் பெருவாழ்வைப் பெறுவார்களாக.

---

அத்தா! உன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்!
அருள்நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்!
எத்தனையும் அரியைநீ எளியை ஆனாய்!
எனை ஆண்டு கொண்டிரங்கி ஏன்று கொண்டாய்!
பித்தனேன், பேதையேன், பேயேன், நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தாய் அன்றே!
இத்தனையும் எம்பரமோ? ஐய ஐயோ!
எம்பெருமான் திருக்கருணை இருந்த வாறே!

—திருநாவுக்கரசர்.

குலம்பொல்லேன்; குணம்பொல்லேன்; குறியும் பொல்லேன்;
குற்றமே பெரிதுடையேன்; கோலம் ஆய
நலம்பொல்லேன்; நான்பொல்லேன்; ஞானி யல்லேன்;
நல்லாரோ டிசைந்திலேன்; நடுவே நின்ற
விலங்கல்லேன்; விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்;
வெறுப்பனவே மிகப்பெரிதும் பேச வல்லேன்;
இலம்பொல்லேன்; இரப்பதே ஈய மாட்டேன்;
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே.

—திருநாவுக்கரசர்.

# பத்திமையின் பண்பாடு

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

பத்திமை கொண்ட வாழ்க்கை தூயது. இனிமை நலம் மிக்கது. சழக்குகளைக் கடந்தது; வழக்குகளை வென்றது ; மகவெனப் பல்லுயிரும் ஒக்கப் பார்க்கும் தண்ணளி யுடையது. உண்மையான பத்திமை, வாழ்க்கையில் விளங்கினல் சிக்கல்கள் இல்லை; பகையில்லை; போரில்லை ; சட்டங்களின் தொகுதியில்லை. மார்க்சு மாமுனிவர் கண்ட அரசற்ற சமுதாயம் அமையும். பண்பட்ட நிலத்தில் விளைச்சல் பெருகி உயர்வதைப் போலப் பத்திமைச் சமுதாயத்தில் அன்பு பெருகும்; அருள் வளரும்; எங்கும் சம நிலை காட்சியளிக்கும்.

இத்தகு பத்திமை வாழ்வு உள்ளத்தொடு பட்டது. பயிருக்கு வளம் தரும் மண்ணின் உரச் சத்து எளிதில் கண்ணுக்குப்புலனவதில்லை. வளரும் பயிரின் வளம் கொண்டே மண்ணின் வளம் காண்கின்ருேம். பத்திமை வாழ்வு உடலொடு தொடர்புடையதல்ல. உடல் ஒரு வாயிலே! ஆனல் முழுக்க முழுக்க உள்ளத்தோடு தொடர்புடையது. நெஞ்சில் பத்தி தழைத்தால் பாரினில் பண்பு தழைக்கும், இன்ருே! பத்திமை வாழ்க்கையின் வடிவங்களே கொலு வீற்றிருக்கின்றன; உணர்வில்லை. சடங்கு ஆசாரங்களே மிஞ்சி வளர்கின்றன. சத்தான—சாரமான வாழ்க்கையைக் காணேம். ஐயகோ! இதனினும் கொடுமை ஒன்றுண்டோ? திருஞானசம்பந்தர் பத்திமை வாழ்க்கையின் இலக்கணத்தை வடித்துத் தந்துள்ளார்.

இன்று, எங்கும் பரபரப்பு! எதிலும் பரபரப்பு! ஆண்டவன் முன்னே அருச்சனை நாமங்களைச் சொல்வதில் கூடப் பரபரப்பு! காரணம் பத்திமை நோக்கமல்ல. அருச்சனை தொழிலாகிவிட்டது. குறைந்த நேரத்தில் நிறையச் சம்பாதிக்க வேண்டும் என்ருல், அருச்சனையைச் சாங்கோ பாங்கமாகச் செய்ய முடியுமா? அப்படியே அருச்சகர் செய்தாலும் செய்து கொள்ள வந்தவர் அடுத்த பேருந்தில் போகப் பரபரத்துக் கொண்டிருப்பார். ஒரு செய்தியினைக் கேட்டுக் கலந்து, ஆராய்ந்து பேசி முடிவு எடுக்க மனமில்லை, பரபரப்பு! 'இப்படிச் சொன்னயாமே! அப்படிச் சொன்னயாமே! என்று ஆவேச உணர்ச்சி. தகுதியை வளர்த்துக் கொள்ளக் கொள்ள உரிமை கிடைக்கும் என்ற நம்பிக்கையில்லை. உரிமை யுணர்வில் ஒரே பரபரப்பு! தகுதியைப் பற்றி மனம் எண்ணிக் கூடப் பார்க்க மறுக்கின்றது. செய்தித் தாள்களில் சில வரிகளே வருகின்றன. பேசியவர் கருத்துக்கும் செய்திக்கும் உறவிருக்காது, உடன்பாடு இருக்காது. செய்தி தந்தவர் முன்னே குறைத்துப் பின்னே சிதைத்துத் தமது தொழிலுக்குரிய பாணியில் செய்தி தந்திருப்பார். இப்படி எத்தனையோ வகையில் பரபரப்பு! பரபரப்புடையவர் பண்பாளராக முடியாது. பத்திமைக்கும் பரபரப்புக்கும் எப்பொழுதும் பகை. ''பரபரக்க வேண்டா, பல காலும் சொன்னேன்'' என்ருர் தருமை ஞான சம்பந்தர். திருஞான சம்பந்தரும் பரபரப்பு கூடாதென்ருர். பரபரப்பு கூடாதென்பது மட்டுமல்ல ; பரபரப்புக்குரிய சூடு ஆற வேண்டுமென்கிருர். ஆக்கிய சூட்டில் அள்ளித் தின்ன முடியாதல்லவா? சூடு ஆற வைத்துத்தானே சுவைத்து உண்டு மகிழ வேண்டும். உள்ளமும் ஆற அமர நிதானித்து எண்ணிப் பழகும் இயல்பைப் பெற்ருல் பகை வராது; பண்பு வளரும் ; பத்தியும் வளரும் பரமனும் அருள்வான்.

பத்திமைக்குக் கள்ளத் தனம் முரணனது. வஞ்சனை ஒழிந்தால்தான் வாழ்வியல் சிறக்கும். உதடு சிரிக்கிறது. ஆனல் உள்ளமோ பற்றி எரிகிறது. முகம் முகமன் உணர்வைக் காட்டுகிறது. ஆனல் முதுகுக்குப் பின்புறம் பேசப் படுகின்றது. பாராட்ட மனமில்லை. ஆனலும், பாராட்டு நிகழ்கிறது. பிறர் ஏற்றங் கண்டு மகிழ மனமில்லை. ஏதேதோ பேசப்படுகிறது. கருத்து மாறுதல்கள் அல்லது தவறுதல்கள் திருத்தப்படக் கூடியவையே! ஆனல் அவை வஞ்சினத்திற்கு வித்திடக் கூடாது. இன்று எங்கும் வஞ்சமே ஆட்சி செலுத்துகிறது. கள்ளம் ஒழிந்தால்தான் கங்காளரைக் காணலாம்.

சொல், உலகத்தில் மிக உயர்ந்தது. சொல்லே மனித உலகத்தை இணைக்கும் பாலம். சொல்லே உணர்வைத் தூண்டுகிறது; உள் அன்பை வளர்க்கிறது. பரமனையும் தருவது.

இத்தகு ஆற்றலுடைய சொல்லை இன்றைக்கு நெறி தெரிந்து பயன்படுத்துவோர் எத்தனை பேர்? சொல்லில் நிகழ்ந்த சோர்வுதானே கோவலனின் உயிர் கொண்டது. நீதியிற் சிறந்த நெடுஞ்செழியனை அநீதிக்கு ஆளாக்கியது. சொற்களைத் தேர்ந்து பயன்படுத்த வேண்டும். அப்படிப் பயன்படுத்தத் தவறினாலும் குறைந்த அளவு சொற்களின் வெப்பத்தை யாவது குறைக்க வேண்டும். சிலர் சொற்கள் செவியைச் சுடுகின்றன ; நெஞ்சைச் சுடுகின்றன ; உணர்வைச் சுட்டு அழிக்கின்றன. இங்ஙனம் சுடும் சொற்கள் பேசுவோர், நிறையத் திருநீறு பூசியவர்களிலும் இருக்கிறார்கள். அக்கு மணிகளை எண்ணில் பலவாக அணிந்தவர்களிலும் இருக்கிறார்கள். சொற்கள் ஈரக் கசிவுடையனவாக இருக்கவேண்டும் என்பது பற்றியே போலும், சொல்லை வழங்கும் நாவினைச் சுற்றி ஈரப்பசை எப்பொழுதும் இருக்க உமிழ் நீர்ச் சுரப்பிகளை இயற்கை அமைத்தது. சிலர் வாய் வறண்டும் கிடக்கும். பாவம்! ஐயன்மீர்! வெப்பம் நிறைந்த சொற்களைக் கூறாதீர்! அவை ஒரு பொழுதும் பயன் தரா. பத்திமைக்கு வெப்பச் சொற்கள் பகை. பரமன் ஏறெடுத்தும் பாரான். பத்திமை வாழ்வு வேண்டுமாயின் கடும் சொற்களைத் தவிர்மின்!

மனித வாழ்க்கை செயல்களை உயிர்ப்பாகக் கொண்டது. செயற்படா உலகம் செம்மை நெறியிற் சேர முடியாது. தொழிற் படா உலகம் தொல்லை இரும்பிறவிக் கடலைக் கடத்தல் முடியாது. செயற்படுக! செயற்படுக! ஆனால் காமத்தோடு செய்யற்க! காம உணர்ச்சி காரியத்தில் நாட்டங் கொடுக்காது. பயன் மீதே நாட்டங் காட்டும். ஒருத்தி உயிரை நேசிக்காது, காதலித்து அன்பு காட்டாது, அவளை வளர்க்காது—அவளிடத்தில் நலங் காண முடியாது — உடலின்பம் ஒன்றையே கருதிப் பெண்டாளுதல் காமம். இத்தகு காமம் இன்பத்தையும் வழங்காது. மாறாகத் துன்பத்தைத் தரும். பொருள், மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது. உண்பித்தும், உண்டும் மகிழப் பொருள் தேவை. இதற்குப் பொருள் தேடாது, 'பொருளாளனாக'ப் பொருள் தேடுதல் காமம் ஆகும். நட்பு, தோழமை உலகத்தில் மிக உயர்ந்தது. 'அது கிடைக்கும் இது கிடைக்கும்' என்று நட்புப் பூணுதல், நட்பன்று; காமம். காமம் என்பது பயனின்றி இயங்கும் ஓர் உணர்ச்சி. அது தன்னலத்தைச் சுற்றியே வட்டமிடும். மற்றவர்களைப் பற்றிக் காம உணர்வுடையாருக்குக் கவலையே இருக்காது. அவர்கள் ஏதாவது செய்தாலும் காம விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளச் செய்வார்களே தவிர, பலருக்குப் பயன்படச் செய்யார். ஏன்? இந்த அசுர காமம் ஒருவனை இடமாகக் கொண்டு முதலில் இயங்கினாலும் பின்னை வளர்ந்து அவனையே மடக்கி—அவனை அணு அணுவாக அழித்தொழிக்கும். ஐயகோ! இத்தகைய காம உணர்வு மனித உலகத்தை அரித்து உருக்குலைக்கும் என்புருக்கி நோயாகும். வீட்டில் காதலித்து இன்புற்று வாழ்க! இது காமமன்று ; அறம்! திருமடங்களில் துறவிருந்து உடைய பொருளைப் பேணி அறஞ் செய்க. அஃது அறம். ஆனால் செல்வச் செருக்கு, தன் முனைப்பு, மக்கட் பணி மறத்தல் காமத்தின் சின்னங்கள். துவராடையே துறவாகாது. நெஞ்சிற் சந்து பொந்துகளிலும் கூடச் சம்பிரதாயமென்ற பெயரில் 'நான்', 'எனது' என்ற செருக்கு ஒட்டியிருக்கக் கூடாது. இத்தகு துறவு தூய உலகத்தை வழி நடத்தும் அறம். கடவுளுக்கு அருச்சனை செய்க! அவன் திருவடியைக் காதலித்து அருச்சனை செய்க! 'அது வேண்டும் இது வேண்டும்' என்று அருச்சனை செய்வது காமம். 'நாதன் தாள் வாழ்க' என்று அருச்சித்தல் காதல், பக்தி.

மனித வாழ்க்கையின் மையம் மனமே! அவன் வீழ்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் மனமே காரணம். மனத் தூய்மையே அனைத்து அறங்களுக்கும் அடிப்படை. நெற்றி நிறைய நீறு தாங்கினால் போதுமா? பூசும் நீறுபோல் உள்ளும் புனித மனத் தூய்மையில்லாதார் தன் முனைப்பில் ஈடுபடுவர். உயர்வு மனப்பான்மை கொள்வர். கூடிப் பழகுதலில் கூச்சங் காட்டுவர். ஆணவப் போக்கு ஆட்சி செய்யும். எப்பொழுதும் ஒரு வழிப் பயணமே செய்வர். எதையும் எளிதில் மறவார். இத்தகு கேடுகள் மனத் தூய்மையின்மையின் சின்னங்கள். பத்திமை வளர வேண்டிய இடம் மனம். பயிர் வளர்வதற்குரிய நிலம் திருந்தாமல் பயிரை வளர்க்க முடியாது. மனம் திருந்தாமல் — தூய்மையடையாமல் பத்திமை வாழ்க்கை வாழ்வது இம்மியும் முடியாது. பத்திமை வேடம் கொள்ளலாம் ; பசனை செய்யலாம். ஆனால் அது பத்திமை வாழ்க்கையாகாது.

இறைவனை ஒன்றிய உணர்வுடன் ஏத்தி வழிபடுதல் வேண்டும். அலையும் மனம் கூடாது. வழிபடும் கடவுள் வடிவங்கள் பலவாகக் கூடாது. 'இவர் தேவர், அவர் தேவர்' என்று அலையக் கூடாது. வழிபாடு செய்யுங் காலத்தின் அளவால் பெருமை யுடையதாகி விடாது. ஆரவாரச் சடங்குகளால் வழிபாடு சிறந்து விடாது. வழிபாட்டுக்கு ஒன்றிய மனம் தேவை. இறைவன் திருவடியில் மனம் ஒன்ற வேண்டும். பொருந்த வேண்டும். அதுவே வழிபாடு.

இறைவன் நாமத்தை நல்லவாறு சொல்லி வாழ்த்த வேண்டும். சிலர் நல்லவாறும் வாழ்த்த மாட்டார்கள். 'பகைவர்களை அழித்து எனக்கு அருள் செய்க' என்று இறைவனை வாழ்த்துதல் ஆரிய மரபு. அங்ஙனம் வாழ்த்துதல் நெறியன்று. அவர்களுக்கு இறைவனும் அருள் பாலிக்க மாட்டான். நல்லன கருதி, நல்லன சொல்லி, நல்ல வண்ணம் நன்றுடையானாக இருக்கின்ற இறைவனை வாழ்த்துதலே இறைவனை வாழ்த்தும் மரபு. இது தமிழ் மரபு. இங்ஙனம் வாழ்த்துதலே பத்திமைக்கு வித்து. பரமனருள் பெறுதற்குரிய வழி.

இங்ஙனம் பரபரப்பின்றிக் கள்ளத் தனம் ஒழிந்து காம உணர்வுடைய செயல்களிலிருந்து விடுதலை பெற்று, மனந் தூய்மையுடையவராகி இறைவன் திருவடிகளிடத்தில் அன்பு காட்டு தலையே பற்றெனக் கொண்டு ஒன்றிக் காதலித்து நல்லவாறே ஏத்தி வழிபட்டாலும் இறைவன் அருள் முழுநிலையில் முதிர்ந்து வெளிப்பட்டு

விடுவதுஇல்லை. உயிரின் வளர்ச்சிக்குத் தகுந்த வாறு அளந்தே இறைவன் அருளை வழங்குவான். வழங்கக் கூடாது என்பதல்ல. வழங்கினாலும் பயன்படுத்தும் தகுதியிருக்காது என்பதனால் — அவன் வளர்த்து வளர்த்தே வழங்குவான். கண்ணப்பன் அன்பினை வளர்க்க ஆறு நாள் தேவைப் பட்டது, காளத்தியப்பனுக்கு! ஆனால், பன்னாள் அருச்சித்த சிவகோசாரியார் வளரவில்லை. இன்றோ கண்ணப்பர்களை வளர்க்க நம்முடைய கோயில்கள் விரும்பவில்லை. சிவகோசாரியார் களைப் பாதுகாக்கவே விரும்புகிறது. மனிதனின் ஆன்மத் தகுதிக்கு ஏற்றவாறே இறையருள் கிடைக்கும். இங்ஙனம் பத்திமை வாழ்க்கை யின் சிறந்த இயல்பினைத் திருஞான சம்பந்தர்,

ஒல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ளமொழிந்துவெய்ய
சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி
நல்லவாறே யுன்றன் நாமம் நாவில்நவின் றேத்த
வல்லவாறே வந்துநல்காய் வலிவலமே யவனே

என்று பாடுகிறார்.



குன்றத்தூரில், ''திருவாசகமணி'' திரு. கே. எம். பாலசுப்பிரமணியம், பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமையில், சேக்கிழார் திருக்கூட்டத்தினர் நிகழ்த்திய குருபூசை விழாவில், பேராசிரியர்-வித்துவான் மறை. திருநாவுக்கரசு அவர்களும், மலேயா திருவருட்செல்வி. சரளாதேவி இராஜசுந்தரம் அம்மையார் அவர்களும் கலந்து கொண்டு உரையாற்றிச் சிறப்பித்தல்.

# ஞானக் கொழுந்து

கி. வ. ஜகந்நாதன்

சைவ சமயத்தில் உள்ளவர்கள் எந்தக் காரியம் செய்தாலும் கணபதியைத் தொழுது தொடங்குவது வழக்கம். திருக்கோயில்களில் புகும் பொழுதே யானை முகனாகிய கணபதி வாயிலில் வீற்றிருப்பதைக் காணலாம். எல்லா மந்திரங்களுக்கும் மூலமாகிய பிரணவ சொரூபி விநாயகர் என்று சாத்திரம் கூறும். ஞானத்தை வழங்கும் விநாயகரை யோகிகளும் மூலாதாரத்தில் உள்ள தெய்வமாகப் போற்றுவர். சிறந்த யோகியான திருமூலர் முதலில் கணபதிக்கு வணக்கம் கூறுகிறார்.

விநாயகருடைய திருவுருவத்தை நினைக்கும்போது யானை முகந்தான் முதலில் நினைவுக்கு வரும். அந்த முகத்தின் சிறப்பிலக்கணம் துதிக்கை. யானைக்குத் துதிக்கையாகிய ஒரு கை தான் உண்டு. ஆனால் யானை முகவனாகிய கணபதிக்கோ தெய்வ நினைவுக்கு ஏற்ப அமைந்த நான்கு திருக் கரங்களும் யானை முகத்துக்கு ஏற்ப அமைந்த நெடுங்கையாகிய துதிக்கை ஒன்றும் ஆக ஐந்து கரங்கள் உண்டு. துதிக்கை அன்பர்கள் உள்ள இடத்துக்கு நீண்டு சென்று வழங்கும் ஆற்றல் உடையது. ''தருகை நீண்ட தசரதன்'' என்றது போலக் கணபதி நீண்ட கை படைத்திருப்பது, தான் வேண்டியதைப் பெறுவதற்கு அன்று ; அவன் ஒன்றாலும் குறைவு இல்லாதவன். தன்னை அணுக அஞ்சுவாருக்கும் நீண்டு சென்று வழங்கும் வண்மையை உடையவன் என்பதைத் துதிக்கை காட்டுகிறது.

இறைவனுடைய திருவருளைப் பெற வேண்டும் என்று நாட்டம் பிறவாமல் நம்மை மலத்தில் அழுத்துவதற்குக் காரணமாக இருப்பது நம்முடைய பொறிகள். இந்தப் பொறிகளின் வாயிலாக நுகரும் நுகர்ச்சிக்கு அடிமைப்பட்டு அந்த நுகர்ச்சியே வாசனையாகப் படிய, அதனால் பிறந்து பிறந்து உழல்கிறோம். ஐம்பொறிகளின் குறும்பை அடக்க வேண்டுமானால் ஞானம் உண்டாக வேண்டும்.

இறைவனுடைய திருவருளால் ஞானம் உண்டாகும். ஞான தாதாவாகிய விநாயகன் ஐம்பொறிகளையும் அடைத்து அருள் செய்ய ஐந்து கரங்களைப் பெற்றிருக்கிறான்.

''உரன்என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து''

என்று வள்ளுவர் வாய் மலர்ந்தார். ஐம்பொறிகளாகிய மத யானையை அடக்கும் அங்குசத்தையும் பாசத்தையும் தன் கரங்களில் வைத்திருக்கிறவன் கணபதி. மற்ற யானைகள் பாசத்தையும், அங்குசத்தையும் கண்டால் அஞ்சும். கணபதியோ அவ்விரண்டையும் தன் திருக்கரத்திலே கொண்டவன். அவை கட்டுப்படும் யானைகள், இவனோ கட்டுப்படாத யானை மட்டுமன்று; ஐம்பொறிகளாகிய யானைகளைக் கட்டுப்படுத்தி, அவற்றால் அஞ்சிக் கட்டுப்பட்ட உயிர்களைப் பாசத்தினின்றும் விடுவிப்பவன். மற்ற யானைகளுக்குக் காமத்தால் மதம் புறப்படும். கணபதிக்கோ அருளாகிய மதம் மலரும்.

''கருணை யென்னும் வெள்ள மதம்
பொழி சித்தி வேழம்''

கை செயலுக்கு அறிகுறி. கை என்ற சொல்லுக்கே செயல் என்ற பொருள் உண்டு ; கையறல் என்ற தொடரால் அது விளங்கும். ஐந்து கைகள் உடையவன் என்பது ஐந்து தொழிலை உடையவன் என்பதற்குரிய அறிகுறியுமாகும். படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளல் என்னும் ஐந்துக்கும் தலைவன் ஐங்கரன்.

யானைத் தலை பெரியது. அறிவுக்குத் தலை அடையாளம். மற்றவர்களுக்கு எல்லாம் உள்ள தலைகளைவிடக் கணபதிக்குப் பெரிய தலை இருக்கிறது ; அவன் யாவரினும் பெரிய அறிவுடையவன் அல்லவா? ஞானத்தின் இருப்பிடம் அவன்; முற்றறிவுடைய மூர்த்தி. அவனுக்கு யானையைப் போல இரண்டு கொம்புகள் இருந்தும் ஒன்றை ஒடித்து விட்டான். இப்போது இருப்பது ஒற்றைக் கொம்புதான். மற்ற யானைக்கும் தனக்கும் வேறுபாடு தோன்றும்படி ஒற்றைக் கொம்புடன் விளங்குகின்றான். அக் கொம்பு மூன்றாம் பிறைச் சந்திரனைப் போல மாசு மறுவற்று வெண்மையாய் வளைவுடையதாய் விளங்குகின்றது.

விநாயகன் தன் கொம்புகளில் ஒன்றை ஒடித்துக் கயமுகாசுரனைச் சங்காரம் செய்தான்; மேருமலையில் பாரதத்தை எழுதினான். நல்லோருக்குத் தீங்கு பயக்கும் அசுர சக்திகளை ஒடுக்கிக் கல்லையும் பதப்படுத்தும் ஆற்றல் அக்கொம்புக்கு உண்டு. இறைவனுக்கு நிக்கிரகம், அநுக்கிரகம் என்ற இரண்டு ஆற்றல்கள் உள்ளன. அவை பகையினாலும் நட்பினாலும் அமைவன

அல்ல. அருளால் செய்வனவே அவை இரண்டும். குணமற்ற பிள்ளையை அடித்தும் குணமுள்ளவனை அணைத்தும் வளர்க்கும் தாய்போல இருப்பவன் அவன். அடித்தலுக்கும் அணைத்தலுக்கும் காரணமாக இருப்பது தாயினுடைய அன்பே ஆகும். அவ்வாறே நிக்கிரகம், அநுக்கிரகம் இரண்டுக்கும் மூலம் அருள் தான். நிக்கிரகத்துக்குக் காரணமானதை அறக் கருணை என்று கூறுவர்.

விநாயகருடைய கொம்புகள் இரண்டில் ஒடிந்த கொம்பு மறக் கருணையையும், ஒடிக்காத கொம்பு அறக் கருணையையும் குறிப்பன. அடி பணியும் அன்பருக்கு மறக் கருணை தோற்றாது. அறக் கருணையை நினைவுறுத்தும் ஒற்றைக் கொம்புதான் தெரியும்; இந்துவின் இளம் பிறையைப் போலக்கண்ணுக்குக்குளிர்ச்சியாய்த் தோற்றம் அளிக்கும். நமக்கு அருள் புரிவான் என்ற எண்ணத்தால் உள்ளம் குளிருமல்லவா?

விநாயகக் கடவுள் சிவபெருமானுடைய குமாரன். கடவுள் ஒருவனே யானாலும் தன்னை வழிபடுபவர்களுடைய நாட்டத்துக்கு ஏற்ப வெவ்வேறு கோலத்திலும் தனித் தனியான சில இயல்புகள் சிறப்பாகப் புலப்படும். சிவ பெருமான் தந்தை. விநாயகன் அவனுடைய பிள்ளை என்ற உறவு, உலகில் உள்ள தந்தை மகன் என்ற உறவு முறையைப் போன்றதன்று. கங்கையில் உள்ள நீரைத் தமக்குப் பயன்பட வேண்டும் என்ற கருத்தினால் ஒரு வெள்ளிக் குடத்தில் எடுத்துக் கொணர்ந்து வைத்துக் கொள்கிறார் ஒருவர். அவர் அதை வெள்ளிக் குடத்துச் சலம் என்று சொல்லுவார். அந்த நீரையே கங்கா சலம் என்றும் சொல்லலாம். இரண்டுக்கும் வேறுபாடு இல்லை. சிவ பரஞ் சுடரின் இயல்புகளை எண்ணும் பக்தர்களுக்கு விநாயகன் வேறு அல்லன் என்ற உண்மை தெரியும். ஆயினும் விநாயகன் என்று தனியே வைத்து வழிபடும்போது பரம் பொருளின் இயல்புகளிற் சிலவற்றைச் சிறப்பாகவும் அழுத்தமாகவும் எண்ணும் நிலை உண்டாகிறது.

தன்னை எண்ணாதவர்க்கு இடையூறுகளையும், எண்ணுவாருக்கு இடையூறு நீக்கத்தையும் உண்டாக்குபவன் என்று விக்னேசுவரனைச் சொல்லுவார்கள். அது அவனது சிறப்பியல்பு. யானை தீங்கும் புரியும்; நன்மையும் புரியும் அல்லவா? சிவ பிரானுடைய குமாரனாகிய விநாயகன் ஞானக் கடலில் ஓர் அலை. ஞானக் கடல் சிவபெருமான்; அவனுடைய குமாரன் அதன் அலை. அலை என்று தனியே பெயர் சொன்னாலும், அது கடலினின்றும் வேறு என்று சொல்லலாமா?

நந்தி என்பது சிவபிரானுக்கு ஒரு பெயர். விநாயகன் அந் நந்தியின் மகன். நந்தி ஞானக் கற்பகம் போல நிற்பவன். அக் கற்பகத்தின் கொழுந்தாக விளங்குபவன் கணபதி.

விநாயகனைப் பார்க்கும் போது முதலில் அவன் துதிக்கையும் மற்றக் கைகளும் தெரிகின்றன; ஐந்து கரத்தன் என்று போற்றுகிறோம். பிறகு பெரிய ஆனை முகம் காட்சி அளிக்கிறது. ஒற்றைக் கொம்பையும் காண்கிறோம். ஐம்பொறியை அடக்கும் ஞானத்தை வழங்கும் வள்ளல், பேரறிவுடையவன், அநுக்கிரக சக்தி உடையவன், பரம சிவத்தின் கான்முளை, ஞான சொரூபி என்றெல்லாம் தெரிந்து கொண்டோம். அந்த எண்ணங்கள் யாவற்றையும் நம்முடைய புத்தியிலே வைத்துப் பார்க்கிறோம். ஒருவன் சிறந்தவன் என்ற அறிவு உண்டானால் நமக்கு அவனிடம் மதிப்பு ஏற்படும். அப்படி ஏற்பட்டால் நாம் அவனிடம் பணிவாக நடக்கத் தொடங்குவோம். இங்கே கணபதியின் இயல்புகளைச் சிந்தித்துப் பார்த்தோம்; புத்தியில் வைத்தோம். அப்போது அவனிடத்தில் பக்தி தோன்றுகிறது. உடனே, அவனைப் பணிய வேண்டும் என்ற உணர்வு எழுகிறது. அவன் திருவடிகளில் விழுந்து வணங்குகிறோம்.

திருமூலர் அவன் இயல்புகளைப் புந்தியில் வைத்தார்; பின்பு அவன் அடியைப் பணிந்து வணங்குகின்றார்.

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

இவன் அருளுவான் என்ற நம்பிக்கையோடு கணபதியை அணுகுவதால், அந்தநம்பிக்கையை அருளும் ஐங்கரங்களை முதலில் சொன்னார். தன்னிடம் ஒன்று இல்லாதவன் பிறனுக்கு எவ்வாறு கொடுக்க இயலும்? இவன் பிறருக்கு அளிக்கும் பொருளாகிய அறிவு நிரம்பப் பெற்றவன் என்பதற்கு ஆனைமுகத்தன் என்று பின் கூறினார். கொடுக்கும் கையும், பொருளும் உடையவன் ஆனாலும் அருளும் இயல்பு உண்டோ என்று என்று ஐயுறுவாருக்கு, அநுக்கிரக சக்தி உடையவன் என்பதை உணர்த்த, இளம் பிறை போலும் எயிற்றன் என்றார். இவன் இப்படி இருப்பதற்கு அடி எங்கே எனின் நந்தி மகன் என்றார். நந்திக்கும் இவனுக்கும் உள்ள தொடர்பு எத்தகையதோ என்பாருக்கு ஞானக் கொழுந்து என்றார்.

இத்தகைய பெருமானை வெறு நிலத்தில் விளையாட விடாமல் புத்தியாகிய நிலத்தில் வைத்துப் போற்றுவேன் என்றார். கரமும் முகமும் எயிறும் அவன் பெருமைகளைக் காட்டினாலும் அவன் புத்தியிலே வைத்தற்குரியனவே யன்றி, யான் பற்றிக் கொள்வதற்கு உரியன அவன் திருவடிகளே என்று குறிப்பிக்க, ''அடி போற்றுகின்றேனே!'' என்றார்.

மனம் மொழி மெய் என்ற மூன்று கரணங்களாலும் கடவுளைப் போற்றுதல் மரபு. புந்தியில் வைத்து என்பது மனத்தால் நினைத்தலைக் குறித்தது. அடி போற்றுகின்றேன் என்றது மெய்யால் வழிபடுதலைக் குறித்தது. வாக்கால் வழுத்துகிறேன் என்று தனியே எடுத்துச் சொல்லாவிட்டாலும், இந்தப் பாட்டை அருளியதே வாக்கின் செயலாதலின் மொழியால் போற்றியதாயிற்று; இது உடம்பொடு புணர்தல் என்பதன்பாற்படும்.

# மதுரைக் கோயில் அமைப்பும் மாட்சியும்

கே. எஸ். நரசிம்மன் B.A., B.L., I.A.S.

**முன்னுரை :**

நம் செந்தமிழ்த் திருநாடு. கோயில்களுக்கும் கோபுரங்களுக்கும் மிகவும் புகழ் பெற்றது. தமிழ் நாட்டிலுள்ள சிறந்த பல திருக்கோயில்களில், மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் சிறப்பும் முதன்மையும் மிக்கதாகும். தமிழ் மக்களின் பண்பட்ட உள்ளம் பரந்து விரிந்திருப்பது போல, மதுரைக் கோயிலும் பெரிதும் பரந்து சிறந்த நிலையில் அமைந்துள்ளது.

அதன்கண் உள்ள கலையழகும் சிலையழகும் அளவிடற்பாலன அல்ல. அக்கோயிலினுள் இருக்கும் பல மண்டபங்களும், அரிய பல சிற்பத் திருவுருவங்களும், பொற்றாமரைக் குளமும், வானளாவ ஓங்கி விளங்கும் விமானங்களும் கண்பெற்ற பயனைக் கண்டு களிக்கத் தக்கவை. அங்குள்ள ஒவ்வொரு கல்லும் கவி பாடும், இசை மிழற்றும். அங்கேயுள்ள சுவர்கள் எல்லாம் காவியங்களும், ஓவியங்களும் நிறைந்திருக்கும். மதுரை நகரில் இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்களை நினைவுறுத்தும் பற்பல சிற்பங்களையும் சித்திரங்களையும் அங்கே காணலாம். தமிழர் நாகரிகத்திற்கும், சிறந்த பண்பாட்டிற்கும், ஒரு பெரிய நிலைக்களனாகவும் எடுத்துக் காட்டாகவும், மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் வயங்குகின்றது.

மதுரை நகரின் நடுவில் கிழக்குத் திசை நோக்கிக் கோயில் அமைந்துள்ளது. கோயிலின் நான்கு பெரிய கோபுரங்களும், தொலைவில் இருந்து காணும் போதே கண்களுக்குப் பெரு விருந்து அளிக்கும். மேற்குக் கோபுரம் வருகின்றவர்களை யெல்லாம் வரவேற்கும். இதிற் புராண கதைகள் பல, சுதையால் எழிலுறத் தீட்டப் பெற்றுள்ளன. தெற்குக் கோபுரம் மிகவும் உயரமானது. அதன் உயரம் 150 அடி. வடக்குக் கோபுரத்துக்குப் பக்கத்தில் 5 இசைத் தூண்கள் வரிசையாய் நிறுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொன்றிலும் 22 தனித் தனி தண்டுகள் இருக்கின்றன. அவைகளை மெல்லெனத் தட்டினால் பல வியக்கத்தக்க ஓசைகள் தோன்றும். கோயிலுக்குள்ளே 8 கோபுரங்களும், 2 விமானங்களும் உள்ளன. வலப்புறம் மீனாட்சியம்மை கோயிலும், இடப்புறம் சுந்தரேசுவரர் கோயிலும் அழகுற அமைந்துள்ளன.

அம்மையின் கோயிலுக்கு முன்னே வளைவுள்ள அஷ்டசக்தி மண்டபமும், சுந்தரேசுவரர் கோயிலுக்கு முன்னே பெரிய கோபுரமும் இருக்கின்றன. இதன் பக்கத்திற் கருப்பண்ண சுவாமி கோயில் உள்ளது. மதுரை 64 சக்தி பீடங்களுள் தலைசிறந்த தொன்றாதலின், அருள்மிகு மீனாட்சியம்மையை முதலில் கண்டு தரிசித்துக் கொண்டே அன்பர்கள் சுந்தரேசுவரப் பெருமானை வணங்கச் செல்வது வழக்கம். கோயிலுக்குள் ஆடி வீதியும், வெளியிற் சித்திரை வீதி, ஆவணி மூல வீதி, மாசி வீதி முதலிய பல வீதிகளும் உள்ளன. திருவிழாக் காலங்களில் முறையே அந்தந்த வீதிகளிற் சுவாமி புறப்பாடு நிகழும். கோயிலின் சுற்றளவு கிழக்கும் மேற்குமாக 847 அடி. தெற்கு வடக்காக 730 அடி.

**மீனாட்சியம்மை கோயில் :**

அம்மையின் கோயிலுக்கு முன்புள்ள அஷ்ட சக்தி மண்டபத்தில், கௌமாரி, ரௌத்திரி, வைஷ்ணவி, மகாலட்சுமி, எக்ஞரூபிணி, சாமளை, மகேசுவரி, மனோன்மணி என்னும் எட்டுச் சக்தியின் வடிவங்கள் உள்ளன. மீனாட்சியம்மை வரலாறு முழுவதும் அழகிய ஓவியங்களாகத் தீட்டப் பெற்றுள்ளது.

இதனை யடுத்தது மீனாட்சி நாயக்கன் மண்டபம். திருமலை நாயக்கரின் அமைச்சர்களுள் ஒருவர் கட்டியது. 160 அடி நீளமும், 6 வரிசைகளில் அமைத்த தூண்களும் உடையது. இதன் மேல் விட்டத்தில் 12 இராசிகள் சதுர வடிவில் அமைக்கப் பெற்றிருப்பது, கண்டு மகிழ்தற்கு உரியது. இங்குப் பூக்கடைகள் முதலியன உள்ளன.

இதற்கு அடுத்து முதலி மண்டபம் இருக்கின்றது. இங்குப் பிட்சாடனர், தாருகா வன முனிவர், மோகினி, கடந்தை முதலியார் ஆகியோரின் சிலைகள் உள்ளன. இதனைக் கடந்து உள்ளே சென்றால் பொற்றாமரைக்குளம் காணப்படும். இதிலேயே சங்கப் பலகை இருந்ததாகக் கூறுவர். இக் குளத்தின் தெற்குச் சுவரில் திருப்பனந்தாள் காசி மடத்தின் பொருளுதவியால், 1330 திருக்குறட் பாடல்களும் வெண் சலவைக் கற்களில் தீட்டிப் பதிக்கப் பெற்று இருத்தலைக் காணலாம்.

பொற்றாமரைக் குளத்திற்கு மேற்கில், அம்மை சந்நிதிக்கு எதிரில், கிளிக்கட்டு மண்டபம் உள்ளது. யாளிகளின் சிற்பங்கள் இருப்பதனால், இதனை யாளி மண்டபம் என்றும், சங்கிலி மண்டபம் என்றும் கூறுவர். இங்குப் பஞ்ச பாண்டவர் சிலைகள் இருக்கின்றன. இம் மண்டபத்தில் அருள்மிகு மீனாட்சியம்மை சந்நிதியின் பிரதான வாயில் உள்ளது. சித்தி விநாயகர் வலப்புறமும், குமரர் சந்நிதி இடப்புறமும் உள்ளன. தெற்கு வாயிலை அடுத்துக் காசி விசுவநாதர் விசாலாட்சி சந்நிதியும், செவந்தீசுவரர் கோயிலும், கிளிக்கூடும் உள்ளன. வடபுறத்தில் சுவாமி கோயிலுக்குச் செல்லும் நடுக்கட்டுக் கோபுர வாயில் உளது. இங்குப் பல அழகிய சிற்பங்கள் உள்ளன.

அம்மையின் கோயிலுக்குள் இரண்டாம் பிராகாரத்தில் கிழக்கில் திருமலை நாயக்கர் மண்டபமும், மேற்கில் நவராத்திரி கொலு மண்டபமும், கூடற் குமரர் சந்நிதியும் இருக்கக் காணலாம். இப் பிராகாரத்துக்கு அடுத்து அறுகாற் பீட வாயில் உள்ளது. இவ்விடத்தில்தான் குமர குருபர சுவாமிகள் அருளிய 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்' அரங்கேற்றப் பெற்றதாகக் கூறுவர். மூலத் தானத்தில் அருள்மிகு மீனாட்சியம்மை கண் கொள்ளாப் பேரழகுடன், கடைக் கண் நோக்கிற் கருணை பொழிய, இரண்டு திருக் கைகளுடன் இளமை நலம் பொலிய இனிது எழுந்தருளிக் காட்சியளித்து நலம் புரிந்து வருகின்றாள்.

**சுந்தரேசுவரர் கோயில் :**

கிழக்குத் திசையில் உள்ள பெரிய கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால், வீரவசந்தராய மண்டபம் உள்ளது. இது முத்து வீரப்ப நாயக்கரால் கி.பி. 1609-இல் கட்டப்பெற்றது. இதன் வடபுறத்தில் ஆயிரக்கால் மண்டபம் உள்ளது. (கி.பி. 1559). மதுரையில் நாயக்க மரபினரின் ஆட்சியினை முதன் முதலில் நிறுவிய விசுவநாத நாயக்கர் அவர்களின் முதலமைச்சரும் படைத் தலைவருமாக விளங்கிய அரியநாத முதலியார் என்பவர் இதனைக் கட்டினார். அவருடைய உருவச் சிலையும் இங்கு இருக்கின்றது. அற்புதமான சிற்ப வேலைப்பாடுகள் இங்குக் காணப்படும்.

வீரவசந்தராய மண்டபத்துக்குத் தென்புறத்தில் திருக்கல்யாண மண்டபம் உள்ளது. இது விசய ரங்க சொக்கநாத நாயக்கர் அவர்களாற் கட்டப் பெற்றது. இதில் சித்திரை மாதத்தில் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருமண விழா நடைபெறும். இதற்கு எதிரில் மருதப்ப சேர்வைகாரர் கட்டிய சேர்வைகாரர் மண்டபமும், முத்து ராமய்யர் மண்டபமும் அமைந்துள்ளன.

கோயிலிலுள்ள மண்டபங்களிலெல்லாம் மிகவும் சிறப்புற்றுக் காண்டொறும் கண்ணையும் கருத்தையும் கவர்வதாகத் திகழ்வது கம்பத்தடி மண்டபம். கொடித் தூண் மண்டபம் என்றும் இதனைக் கூறுவர். சகம் 1494-இல், கிருஷ்ண வீரப்ப நாயக்கர் என்பவரால் முதன் முதலில் கட்டப் பெற்ற இம் மண்டபம், அண்மையிற் சில காலத்திற்கு முன்பு நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்களாற் புதுப்பிக்கப் பெற்றது. அக்கினி வீரபத்திரர், அகோர வீரபத்திரர், ஊர்த்துவ தாண்டவர், பத்திரகாளி ஆகியோரின் திருவுருவங்கள், இங்கு மிகவும் வியத்தகு நிலையிற் பெரிய அளவில் விளங்குகின்றன.

கொடி மரத்தின் இரு புறங்களிலும் பல சிற்பங்களைக் கொண்ட எட்டுப் பெரிய தூண்கள் உள்ளன. அவற்றில் கைலாசாரூடர் சந்திரசேகரர் இடபாந்திகர் இலிங்கோற்பவர் காமதகனர் நடராசர் சுகாசனர் காலசம்மாரர் மார்க்கண்டேயர் சோமசுந்தரர் கல்யாணசுந்தரர் திரிபுராந்தகர் சங்கரநாராயணர் அர்த்தநாரீசுவரர் இடபாரூடர் ஏகபாதமூர்த்தி சக்ரதரர் சலந்தரானுக்கிரகர் தட்சிணாமூர்த்தி கஜசம்மாரர் சண்டேசானுக்கிரகர் சோமாஸ்கந்தர் கிராதார்ச்சுனர் உருத்திரர் பிட்சாடனர் என்னும் திருவுருவங்கள் சிற்பத் திறன் அமையச் சிறந்து விளங்குகின்றன.

கம்பத்தடி மண்டபத்திற்கு வடக்கில் மண்டப நாயக மண்டபம் உள்ளது. இதனை நூற்றுக்கால் மண்டபம் என்பர். இது சின்னப்ப நாயக்கர் என்பவரால், சகம் 1448-இல் கட்டப்பட்டது.

இதற்குத் தென்புறம் உள்ளது திருஞான சம்பந்தர் மண்டபம். இதனைக் கட்டியவர் கிருஷ்ண வீரப்ப நாயக்கர். சுவாமி கோயிலின் பிரதான வாயிலைக் கடந்து, தென் பிராகாரத்துக்குச் சென்றால் முக்குறுணிப் பிள்ளையார் சந்நிதியைக் காணலாம். இப் பிராகாரத்தின் வடமேற்கில் கபிலர் பரணர் நக்கீரர் முதலிய சங்கப் புலவர் மண்டபம் உள்ளது. வடக்குப் பிராகாரத்தில் சங்கப் புலவர் உலா மண்டபம் இருக்கின்றது. அந்தப் பிராகாரத்திலேயே, தலவிருட்சம் ஆகிய பழைய கடம்ப மரம் வெள்ளித் தகடு பொருத்தப் பெற்றுள்ளது.

இக் கோயிலில் வெள்ளியம்பலம் உள்ளது. இங்கு நடராசப் பெருமான் கால்மாறி ஆடிக் காட்சி தருகின்றார். சாதாரணமாக வலக்காலை ஊன்றி இடக் காலைத் தூக்கி ஆடுவதனையே, நடராசப் பெருமானின் திருவுருவங்களிற் காணலாம். ஆனால் இராசசேகரன் என்னும் பாண்டிய மன்னன் ஒருவனின் வேண்டுகோளுக்கு இணங்க, இங்குப் பெருமான் இடக்காலை ஊன்றி, வலக்காலைத் தூக்கி நடனம் ஆடுகின்றார்.

இக் கோயிலில் நடராசருக்குப் பஞ்ச சபைகள் உள்ளன. முதற் பிராகாரத்தில் கனக சபையும், இரத்தின சபையும், வெள்ளியம்பலத்தில் இரசித சபையும், நூற்றுக்கால் மண்டபத்தில் தேவ சபையும், ஆயிரக்கால் மண்டபத்தில் சித்திர சபையும் உள்ளன.

மூலத்தானத்தில் சொக்கலிங்கப் பெருமான் (அருள்மிகு சுந்தரேசுவரர்) எழுந்தருளியுள்ளார். இங்குள்ள விமானம் இந்திர விமானம் எனப்படும். அஃது எட்டு யானைகளால் தாங்கப் பெறுவது. 6 யானைகள் வெளிப்புறத்திலும், 2 யானைகள் மூலவர் பக்கத்திலும் உள்ளன. மூலவருக்குச் சொக்கலிங்கர் என்றும், உற்சவருக்குச் சோமசுந்தரர் என்றும் பெயர்கள் வழங்கும்.

**மற்றும் உள்ள மண்டபங்கள் :**

அருள்மிகு சுந்தரேசுவரர் கோயிலின் கீழ்ப்புறக் கோபுரத்துக்கு எதிரில் உள்ளது புது மண்டபம். இதனை 'வசந்த மண்டபம்' என்றும் கூறுவர். திருமலை நாயக்கர் கட்டியது. 333 அடி நீளமும், 105 அடி அகலமும், 25 அடி உயரமும் உள்ளது. 4 வரிசைகளில் 124 தூண்கள் உள்ளன. தூண்களிற் பலவகைச் சிறந்த சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

புது மண்டபத்துக்குக் கிழக்கே இராய கோபுரம் உள்ளது. 174 அடி நீளமும், 107 அடி அகலமும், நுழைவாயில் 22 அடி அகலமும் உள்ளது. 60 அடி உயரமுள்ள நான்கு தூண்கள் மிகவும் சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்குகின்றன. மற்றும் நகரா (மேள வாத்தியம்) மண்டபம், தேரடி மண்டபம், மைய மண்டபம் முதலியன பிறவும் உண்டு. இவைகள் அனைத்தும் கண்டு களிக்கத் தக்க சிறப்புடையவை.

**மதுரையில் மற்றுமுள்ள கோயில்கள் :**

திருவாப்புடையார் (திருவாப்பனூர்க்) கோயில், வட திருவாலவாய்க் கோயில், காஞ்சனமாலை கோயில், ஆஞ்சநேயர் கோயில், தென்திருவாலவாய்க் கோயில், பைரவர் கோயில், செல்லத்தம்மன் கோயில், சப்தமாதர் வீரபத்திரர் கோயில், மாரியம்மன் கோயில், முத்தீசுவரர் கோயில், இம்மையிலும் நன்மை தருவார் கோயில், கூடலழகர் கோயில், சீனிவாசப் பெருமாள் கோயில், மதன கோபால சுவாமி கோயில், முனீசுவரன்கோயில், பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் கோயில் முதலிய வேறு பல கோயில்களும் மதுரையில் உள்ளன. இவைகள் அனைத்தும் நாம் பலகால் தரிசித்து மகிழத் தக்கவை.



குன்றத்தூரில் நடைபெற்ற சேக்கிழார் விழாவின் போது, பெரியபுராணத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் திருவாசகமணிக்கும், அதன் ஆதரவாளர் 'சன்மார்க்கச் சான்றோர்' வள்ளல் திரு. நா. மகாலிங்கம் அவர்களுக்கும் பொன்னாடை போர்த்தினார்கள்.

# தொல்காப்பியம் சுட்டும் சமயக் கருத்துக்கள்

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,

## முன்னுரை

நமது தமிழ் மொழியிலுள்ள நூல்கள் அனைத்திலும், மிகமிகப் பழமையும் பெருமையும் வாய்ந்தது தொல்காப்பியமேயாகும். இதன் காலம் சுமார் 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டதென ஆராய்ச்சியாளர்கள் உடன்பட்டுள்ளனர் (1). இத்தகைய பழம்பெரும் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலேயே, சமய தத்துவக் கருத்துக்கள் விரவிக் காணப் படுகின்றன.

(1) ''தொல்காப்பியம் என்னும் பழமை மிக்க இலக்கண நூலில் பயன்படுத்தப்பட்டுள்ள இலக்கணக் குறியீட்டுச் சொற்கள், வாழ்க்கை இயலின் இலக்கணத்தை, விளக்குவதற்குத் தேவையான தத்துவக் குறியீட்டுச் சொற்களுடன் கலந்த நிலையில் ஒன்றுபட்டுத் திகழ்கின்றன. இலக்கணத்தில் கூறப்படுகின்ற எழுத்துக்கள் சொற்கள் சொற்றொடர்கள் ஆகியவற்றினிடத்தில், அவைகளுக்கு ஒப்புமையுடைய தெய்விகத் தத்துவச் சொற்களை மாற்றி அமைத்தால், தொல்காப்பிய விதிகள் அல்லது நூற்பாக்கள், தமிழ் மொழியின் அமைப்பியலை விளக்குவது மட்டுமின்றி, மக்களின் வாழ்க்கையினையும் விவரித்து விளக்குவனவாகத் திகழ்வதைக் காணலாம். இவ்வுண்மை தொல்காப்பியத்தினை மேல் நோக்காக ஒரு சிறிது காண்போர்க்குங்கூடத் தெற்றென விளங்கும்''(2).

(2) ஆசிரியர் தொல்காப்பியர், தமிழிலக்கணத்தில் எழுத்துக்களுக்குப் பெயரமைத்திருக்கும் முறையே, தமிழ் மக்களின் நுண்மாண் நுழைபுலத்தினை நுனித்துணர்த்த வல்லதாயுள்ளது. தாமே தனித்தியங்கவல்ல எழுத்துக்களுக்கு 'உயிர்' என்றும், உயிரோடு கூடி அல்லது இயங்கலாற்றாத எழுத்துக்களுக்கு 'மெய்' என்றும், உவமை ஆகுபெயராற் காரணம் பற்றிச் சமய தத்துவக் கருத்தின் அடிப்படையில் பெயர்கள் அமைக்கப்பட்டுள்ளன. தமிழ் மக்களின் தலைசிறந்த தத்துவ ஞானத்தினை இப்பெயர்கள் தகவுற விளங்குகின்றன (3). இப்பெயர்களின் குறிப்புகளுக்கு முன்னொடு பின் சிறிதும் முரணாமல், தமிழில் எழுத்திலக்கணம் வகுக்கப் பெற்றுள்ளது. க்ருபை, த்யானம் என்னும் வடசொற்களைப்போல, மெய்யெழுத்துக்கள் தமிழில் மொழி முதற்கண் வருவதில்லை. ''உயிர்மெய் யல்லன மொழி முதலாகா'' என்பது தொல்காப்பியச் சூத்திரம். சொற்களில் மெய்யெழுத்துக்கள் முதலாக வருதல் கூடாது என்னும் வரையறை, அழிந்துபடும் இயல்பிற்றாகிய உடம்பின் இழிதகவையும், அழியா இயல்பிற்றாகிய உயிரின் மேம்பாட்டினையும் உணர்த்தும் வகையில், அறிவிற்குப் பொருத்தமாகச் செய்யப்பட்டிருப்பதொன்றாகும்.

(3) உயிரின் அறிவும் இயல்பும் அது சாரும் உடம்பிற்கு ஏற்பவே அமையும் என்பது ''மெய்யின் வழியது உயிர் தோன்றும் நிலையே'' என்னும் நூற்பாவால் குறிக்கப்படுகின்றது. உடம்பைவிட்டு உயிர் நீங்கிவிடுமாயின், அது தனக்குரிய முழு நிறைவான இயல்புகளை எய்தி நிற்கும் என்னும் உண்மை, ''மெய்யுயிர் நீங்கில் தன்னுருவாகும்'' என்னும் நூற்பாவால் சுட்டப்பெற்றது. உயிர் தனது வினைப் பயன்களை நுகர உடலின் சேர்க்கையை அடையும், உடலின் சேர்க்கையின்றி வினைப் பயன்களை உயிர் தானே தனித்து நின்று நுகரப்பெறாது என்பது, ''புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித்து இயலாது, மெய்யொடு சிவணும் அவ்வியல் கெடுத்தே'' என்னும் நூற்பாவால் உணர்த்தப்படுகின்றது. உயிரும் உயிரும் தம்முள்

---

(1) "As regards the age of Tholkappiam, I have investigated almost all the divergent views expressed by notable scholars and concluded that its composition could not have taken place later than 2500 B.C. That this assignment of a Tamil work to so high an antiquity may not be deemed extravagant, when this is compared with the age of 4500 B.C., ascribed to the Rig Veda by such eminent oriental scholars and historians as Prof. Hermann Jacobi, Bal Gangadhar Tilak and Dr. Bloomfield."

—MARAIMALAI ADIGAL

(2) "Even a cursory glance of that ancient grammar Tholkappiam, will convince that the grammatical terminology employed in it are the identical philosophical terminology necessary for dealing with the grammar of the phenomena of life. If in space of the alphabet, words and sentences, treated in the grammar, their corresponding mystic equivalents in philosophy are substituted, the Sutras or the rules of Tholkappiam expound the phenomena of life instead of the phenomena of the Tamil language."

—P. V. MANICKAM NAICKER,
*(The Tamil Alphabet, Its Mystic Aspect)*

(3) "Tamil grammarians designate vowels by a beatuiful metaphor, as Uyir or life of a word, Consonants as Mey or the body: and the junction of a vowel and consonant as Uyirmey or an animated body."

—DR. CALDWELL.

சேரமாட்டா. உயிர் சேருதற்கு உடல் இன்றி யமையாதது என்னும் கருத்து, ''எல்லா மொழிக்கும் உயிர் வருவழியே, உடம்படு மெய்யின் உருவு கொளல் வரையார்'' என்னும் நூற்பாவினுல் ஒருவகையில் தெளிவுறுத்தப்படு கின்றது. இன்னேரனைய தொல்காப்பியச் சூத்தி ரங்கள், தமிழிலக்கண நூற் கருத்துடன் தத்துவ நூற்கருத்தினையும் இணைத்துப் பிணைத்து இயம்புவனவாக இருத்தல் காணலாம்.

(4) தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில், மொழி மரபியலில், ''மெய்யின் இயக்கம் அகர மொடு சிவணும்'' எனவரும் நூற்பாவிற்கு, ''இறைவன் இயங்குதிணைக் கண்ணும், நிலைத் திணைக்கண்ணும், பிறவற்றின்கண்ணும், அவற் றின்தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்பமுடிந்தாற்போல, அகரமும் உயிர்க் கண்ணும் தனிமெய்க்கண்ணும் கலந்து அவற் றின் தன்மையாகவே நிற்கும் என்பது ஒப்ப முடிந்தது. 'அகர முதல' என்னும் குறளால், 'அகர மாகிய முதலையுடையன எழுத்துக்களெல் லாம்; அதுபோல இறைவனுகிய முதலையுடை யது உலகம்' என வள்ளுவர் கூறியவாற்ருனும், கண்ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே' எனக் கூறிய வாற்ருனும் பிற நூல் களானும் உணர்க'' என நச்சினர்க்கினியர் எழுதியிருக்கும் விளக்கவுரை, இங்கு அறிந்து இன்புறற்பாலது.

''அகர உயிர் இன்றேல் அக்கரங்கள் இன்ரும்''
—சிவஞான போதம்.

''அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து''

—திருவருட் பயன்.

(5) தமிழ் மொழியின் எழுத்துக்களைத் தத்துவ அடிப்படையில் உயிர் எழுத்து மெய் யெழுத்து என்று பிரித்துப் பெயர் வழங்கினுற் போலவே, உலகியற் பொருள்களையும் உயிர் களையும் கூடத் தத்துவ அடிப்படையிலேயே உயர்திணை அஃறிணை எனப் பாகுபாடு செய்து, தமிழ்ச்சான்ருேர்கள் வழங்கியிருக்கின்றனர் (4).

உயர்திணை என்மனுர் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனுர் அலர்அல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே''

எனவரும் தொல்காப்பிய நூற்பா, மக்கள் வேறு—மக்கட் சுட்டு வேறு எனப் பாகுபாடு செய்து, மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும் அதுவே மக்கட் சுட்டாகும் என்று வரையறைப் படுத்தி விளக்கியிருக்கும் நுட்பம், பெரிதும் போற்றற்பாலது.

---

(4) "The philosophic meaning of the Sutra is distinct. The Karma does not transform with the transmigration of souls but remains intact and lies dormant waiting for the proper time according as the Karma is Akamiya or Prarathva or Samchitha"

—P. V. MANICKAM NAICKER.

தக்க இன்ன தகாதன இன்னவென்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும் விலங்கே; மனு வின்நெறி
புக்கவேல், அவ் விலங்கும் புத்தேளிரே''

—கம்பர்

எனவரும் சிறந்த நல்ல பாடல், இந்நூற் பாவின் பொருளையே அடிப்படையாகக் கொண்டு அமைவதாயிற்று. உடம்பு ஒன்றே பற்றியன்றி, பண்பும் உணர்வும் பற்றியே, மக்கள் அல்லது மாக்கள் என்பது துணியப் படும் என்றதனுல், தொல்காப்பிய நூலின் சமய தத்துவ அடிப்படை தெற்றென விளங் கும்.

(6) இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியர் வினைச்சொல் குறித்து வகுத்துள்ள இலக்கண மும், பெரிதும் வியந்து போற்றற்பாலதாக இருக்கின்றது. சொற்கள் பெயர்-வினை-இடை-உரி என நான்கு வகைப்படும். ஆயினும் இவற் றுள் பெயரும் வினையுமே மிகவும் முதன்மை வாய்ந்தவை. பெயர்ச்சொல்லின் அடியாக வினைச்சொற்களும், வினைச்சொல்லின் அடியாகப் பெயர்ச்சொற்களும் தம்முள் ஏற்ற பெற்றி தோன்றும். வினைச் சொற்களுக்கும் பெயர்ச் சொற்களுக்கும் இடையே உள்ள வேறு பாட்டினை,

''வினைஎனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்''

எனத் தொல்காப்பியம் விளக்குகின்றது. இதன் படி, முருகனை-முருகனுல்-முருகனுக்கு என்ருற் போலப் பெயர்ச்சொற்கள் வேற்றுமையுருபுகளை ஏற்றுவரும். ஆனுல்வினைச் சொற்கள் வேற் றுமை யுருபுகளைஏற்று வருவதில்லை. வந்தான்-வருகின்ருன்-வருவான் என்ருற்போல வினைச் சொற்கள் காலம் காட்டிவரும். பெயர்ச் சொற்கள் காலம் காட்டும் இயல்புடையன அல்ல. எனவே, வினைச் சொற்கள் வேற்றுமை யுருபுகளை ஏலாமல், காலம் காட்டிவரும் இயல் புடையன என்பது, இந்நூற்பாவின் திரண்ட பொருள்.

இனி, இதனைக் கூர்ந்து நோக்கின், வேருெரு சிறந்த பொருளும் இதன்கண் அமைந்திருத்தல் காணலாம். நாம் செய்யும் ஒவ்வொரு செயற்கும் அதற்குரிய பயன் திண்ணமாக உண்டு. நற்செயல் புரிவோர் அதற்குரிய பயனுகிய நன்மையையும், தீச்செயல் புரிவோர் அதற்குரிய பயனுகிய தீமையையும் அடைந்தே தீருவர். ''வினை எனும் சொல் செயலையும், அதன்பயனையும், அப்பய னைத் தரும் தெய்வத்தையும் முறையே குறிக் கும். அவரவர் செயலுக்கு ஏற்பப் பயன்களை எய்துவிக்கும் பால்வரை தெய்வமானது (சொல்-57), வினைப்பயன்களை எய்துவிக்குங்கால், செல் வர், வறியர், கற்ருர், கல்லார், உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்பன போன்றவேற்றுமைகளைச் சிறிதும் கருதுவதில்லை. வினைப்பயன் வினை செய்தோரை அடைந்தேதீரும். ஆயினும் வினைப்பயன்கள் ஒரு போழ்தத்தேயோ உடனடி யாகவோ அன்றி, அவ்வவற்றிற்குரிய காலங் களிலேயே முறைப்படி வந்தெய்தும்...''(4)

எனப்பிறிதொரு சிறந்த தத்துவ நூற்பொருளும் இந்நூற்பாவின்கண் அமைந்துவிளங்குதல் காணலாம்.

(7) உணவும் நீரும் காற்றும் நீராடலும் மருந்தருந்தலும் உடல் வாழ்விற்குப் பலவகை நலன்களை விளைவித்தலைப் போல நமது வாழ்விற்கு இறைவழிபாடு மிகப்பெரிதும் இன்றியமையாததாகப் பெருநலன்களைப் புரிகின்றது. அதுபற்றியே இற்றைக்கு 5000 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்திருந்த தொல்காப்பியனர்,

''வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழிச் சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே''

என இறைவழிபாட்டின் சிறப்பையும், பயனையும் ஒருவகையில் விளக்கிக் கூறியுள்ளார். இதன்கண், வழிபாடு இன்றியமையாததொன்று என்பதும், அது மனிதரையன்றித் தெய்வத்தைக் குறித்து நிகழ்தல் வேண்டும் என்பதும்; வழிபடுவோரை வழிபடப்பெறும் தெய்வம் காத்தருளும் என்பதும்; வழிபாட்டின் பயனாகப் பழிதீர் செல்வங்கள் பற்பலவற்றை எய்தலாம் என்பதும்; வழிபடுவோர் மட்டுமேயன்றி அவர்தம் வழிவழியாக வரும் உற்றார் உறவினருங்கூட வழிபாட்டின் பயனாகச் சிறப்பு எய்திப் பொலிந்து இன்புற்று வாழ்வார்கள் என்பதும், நுண்ணிதின் எண்ணி உணரும்படி அறிவுறுத்தப் பெற்றுள்ளன.

(8) ஆசிரியர் தொல்காப்பியர், தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் பொருள்களை முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்றாகப் பகுத்தார். அவற்றுள் நிலத்தையும் காலத்தையும் ''முதற்பொருள்'' எனக் குறித்தார். நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நான்காகப் பகுத்து, அவற்றிற்கு முறையே மாயோன் (திருமால்), சேயோன் (முருகன்), வேந்தன் (இந்திரன்), வருணன் என்னும் தெய்வங்களைக் குறித்தார். தெய்வ வழிபாட்டின் இன்றியமையாமைபற்றி, முதற் பொருளாகிய நிலத்தைக் கூறவந்த இடத்திலேயே கருப்பொருளாகிய தெய்வ வழிபாட்டையும் சேர்த்து இயைத்தே தொல்காப்பியர் கூறியருளியுள்ளார். காலத்தெய்வம், பால்வரை தெய்வம் முதலியவேறு பிற கடவுளரையும்கூட, அவர் குறிப்பிட்டருளியிருத்தல் காணலாம். (தொல் சொல். 58).

(9) இனி, பொருளதிகாரப் புறத்திணையியலினுள் 81-ஆம் சூத்திரத்தில் ''அமரர்கண் முடியும் அறுவகையானும்'' என்றமையால், வானவர் உட்பட ஆறுவகையினரை வாழ்த்துதல் பண்டைய மரபாக இருந்தது. அவர்கள் முறையே, வானவர் முனிவர் ஆனினம் மழை அரசன் உலகம் எனப்படுவர். இத்தொல்காப்பிய நூற்பாவை ஒட்டியே,

''வாழ்க அந்தணர், வானவர், ஆனினம்;
வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்க தீயது; எல்லாம் அரன்நாமமே
சூழ்க; வையக மும்துயர் தீர்கவே''

என்னும் திருஞானசம்பந்தர் பாடல் அமைந்திருக்கக் காண்கின்றோம்.

''கொடிநிலை வள்ளி கந்தழி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே''

எனவரும் புறத்திணை இயல் 88-ஆம் நூற்பாவில், கொடிநிலை (ஞாயிறு), கந்தழி(தீ), வள்ளி (திங்கள்) என்ற மூன்றும், கடவுள் வாழ்த்தொடு பொருந்திவரும் எனத்தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. அக்கருத்தினைத் தழுவியே சிலப்பதிகாரத்தில் 'ஞாயிறு போற்றுதும்', 'திங்களைப் போற்றுதும்', 'மாமழை போற்றுதும்' என்னும் வாழ்த்துக்கள் அமைந்தன எனலாம்.

(10) தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே தமிழகத்திற் கோயில்கள் இருந்தன. ''இல்லொடு கிளப்பின் இயற்கை யாகும்'' என வரும் எழுத்ததிகார நூற்பா, கோயில் என்னும் சொல்லுக்கு இலக்கணம் வகுத்திருத்தலால், இவ்வுண்மை செவ்விதின் உணரப்படும். அக்கோயில்களில் தெய்வத் திருவுருவங்கள் இருந்து வந்தன ; அவற்றிற்குப் பூசைகளும் விழாக்களும் நிகழ்ந்து வந்தன. அவைகள் முறைப்படி தவறாமல் நிகழ்த்தப் பெற்று வருகின்றனவா? என்று அரசர் அல்லது தலைவர்கள் கண்காணித்து அறப் புறங் காவல் புரிந்து வந்தனர். இவ்வுண்மை,

''மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே''

என வரும் நூற்பாவில், ''படிமை (பிரதிமை Idol) ஆவது தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின்கண் செய்தமைத்த தேவர் மேல் வந்தது. அவருடைய பொருளாவன பூசையும் விழாவும் முதலியன'' என ஆசிரியர் இளம்பூரணர் விளக்கவுரை வரைந்திருத்தல், கடவுளரின் திருவுருவ வழிபாடு முதலியன, தொல்காப்பியர்க்கு உடன்பாடேயாம் என்பதனை வலியுறுத்தும்.

(11) இந்நாளில் சித்திரையை முதல் மாதமாகக் கொண்டு, ஓர் ஆண்டின் மாதங்கள் கணிக்கப் பெற்று வருகின்றன. இங்ஙனமின்றி மிகப் பழங்காலத்தில் ஆவணியை முதல் மாதமாகக் கொண்டு, ஓர் ஆண்டின் மாதங்களைக் கணித்தல் அறிஞர்களின் வழக்கமாக இருந்து வந்தது. ஞாயிற்றுக்குரிய ஓரை சிங்கவோரை என்றும், அதற்குரிய திங்கள் ஆவணியாதலின், ஆவணி தொடங்கி மாதங்களை எண்ணுதல் ஒரு முறை என்றும், பண்டையோர்கள் கொண்டிருந்தனர். இவ்வுண்மை,

''கால உரிமை எய்திய ஞாயிற்றுக்குஉரிய சிங்கவோரை (ஆவணி) முதலாகத் தண்மதிக்கு உரிய கற்கடகவோரை (ஆடி) ஈறாக வந்து முடியுந் துணையும் ஓர் யாண்டு ஆம். ஆதலின், அதனை இம்முறையானே அறுவகைப்படுத்து இரண்டு திங்கள் ஒரு காலம் ஆக்கினர்''

என ஆசிரியர் நச்சினர்க்கினியர், ''காரும் மாலையும் முல்லை'' எனவரும் தொல்காப்பிய நூற்பாவின் உரையிற் கூறியுள்ளது கொண்டும் தெளியப்படும். இவ்வாறு ஆவணியை முதல் மாதமாகக் கொண்டு கணிக்கும் முறை, சுமார் 7000 ஆண்டுகட்கும் முன்பு தொடங்கியிருத்தல் வேண்டும் என வானநூல் ஆராய்ச்சி வல்லார் கருதுகின்றனர்.

ஆவணி மாதம் ஆண்டின் முதல் மாதமாகக் கருதிக் கணிக்கப் பெற்று வந்தஅப் பழங்காலம் முதலே, விநாயகர் வழிபாடும் தோன்றி நிலவி வரத் தலைப்பட்டிருத்தல் வேண்டும். விநாயக சதுர்த்தி விழா என்பது, இன்றும் ஆவணி மாதத்திலேயே கொண்டாடப் பெற்று வருதல், இங்குச் சிந்திக்கற்பாலது.

*(12)* அம்மை வழிபாடு, விநாயகர் வழிபாடு, முருகன் வழிபாடு, சிவவழிபாடு, திருமால் வழிபாடு, கதிரவன் வழிபாடுஎன்னும் அறுவகை வணக்கமே பிற்காலத்திற் பேசப்பெற்ற அறுவகைச் சமயம் என்னும் வழக்கிற்கு அடிப்படையாக அமைவதாயிற்று. இந்த ஆறுவகைத் தெய்வங்கட்குப் பூசனை புரிவோரையே, ''அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்'' எனத் தொல்காப்பியம் குறிப்பிட்டதெனப் பேராசிரியர் திரு. கா. சுப்பிரமணியபிள்ளை போன்ற சிறந்த ஆராய்ச்சியாளர் சிலர் கருதுவர்.

*(13)* இங்ஙனமே இயமம், நியமம்,ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய அட்டாங்கயோகம் என்னும் எண்வகை யோகநெறிமுறைகளையே ''நாலிரு வழக்கில் தாபதப் பக்கம்'' எனத் தொல்காப்பியர் குறித்தருளினர். ஆசிரியர் நச்சினர்க்கினியர் இதனை விரிவாக விளக்கியிருத்தல் காணலாம்.

*(13)* ''வேண்டிய கல்வி ஆண்டு மூன்றிறவாது'' என்னும் நூற்பா, தலைவன் ஓதற் பிரிவின்கண் இறை-உயிர்-தளை (பதி பசு பாசம்-சித்து அசித்து ஈசுவரன்-சகம் சீவன் பரம்) என்னும் முப்பொருள்களைப் பற்றிய தத்துவ ஆராய்ச்சியிலேயே தலைப்படுவான் என்னும் கருத்தையும் இனிதுணர்த்துகின்றது என்பர்.

''காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''

எனவரும் கற்பியற் சூத்திரம், ''முற்கூறிய இல்லறத்தின் பயன், உறுதிப் பொருள் நான்கினுள் சிறந்ததாகிய வீட்டின்பம் எய்துதற்கு, ஏமஞ் சான்ற வானப்பிரத்த நிலையும் துறவுநிலையும் எய்தி, இறைவழி பாட்டுக் காதல்நெறி ஆகிய சன்மார்க்க ஞானத் துறையிற் பயிற்சிபெறுதலே யாகும்'' என்பதனை வலியுறுத்துகின்றது.

''வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்''

எனவரும் நூற்பாவில், இறைவனுக்குரிய சிறப்பியல்பினை மிகவும் தெள்ளத் தெளிவாகத் தொல்காப்பியம் குறிப்பிட்டிருத்தல் பெரிதும் சிந்தித்து உணர்தற்குரியது.

''ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி யுயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே''

எனவரும் தொல்காப்பிய நூற்பாவினுல், எல்லோரையும் எல்லாவற்றையும் மேல்இருந்து இயக்கி வருகின்ற இறையருளாணையாகிய நியதி தத்துவம் என்னும் ஊழ் (பால்வரை தெய்வம், வகுத்தான் வகுத்தவகை) என்பதொன்று, தெள்ளிதின் அறிவுறுத்தப்படுகின்றது.

''நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்...''

எனவரும் தொல்காப்பிய மரபியல் நூற்பாவினுல், பண்டைத் தமிழ்மக்கள் சமய தத்துவ ஆராய்ச்சிகளில் (Metaphysics) தலைசிறந்து திகழ்ந்திருந்தமை புலனுகின்றது. ''மூன்றன் பகுதி'' ''அறமுதலாகிய மும்முதற் பொருள்'' எனவரும் தொல்காப்பிய நூற்பாத் தொடர்களால், 'அறத்தாற் பொருள் ஈட்டிப் பொருளால் இன்பம் துய்த்து வாழ்தல் வேண்டும்' என்னும் உயரிய குறிக்கோள்நெறி, பண்டைத் தமிழ் மக்களாற் கடைப்பிடிக்கப் பெற்றமை தெற்றெனத் தெரிகின்றது. ''மூவகைக் காலமும் நெறியின் அறிவன் தேயமும்'' என்பதனுல், பண்டைய நம் தமிழ்மன்பதையில், முக்காலமும் உணரவல்ல தக்கோர்கள் (திரிகால ஞானிகள்) பலர் இருந்து வந்தமையும் புலப்படுகின்றது.

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப''

எனவரும் தொல்காப்பிய நூற்பாவால், அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தே விடும் இயல்பு வாய்ந்த நிறைமொழியையுடைய அருளாளர்களாகிய சமய நெறிச் சான்றோர்கள் பலர் வாழ்ந்து வந்தனர் என்பதும், தமிழ் மொழியின்கண் மந்திரங்கள் பல உண்டு என்பதும் பிறவும் விளங்குகின்றன.

*(14)* தொல்காப்பியம் மொழிக்கு இலக்கணம் கூறும் நூலேயாயினும், அதன்கண் ஆங்காங்கே கடவுள் இலக்கணமும் அழகுற நுட்பமாக அறிவுறுத்தப் பெற்றுள்ளது. ''ஒப்பும் உருவும் வெறுப்பும் என்ரு, கற்பும் ஏரும் எழிலும் என்ரு, சாயலும் நாணமும் மடனும் என்ரு, நோயும்வேட்கையும் நுகர்வும் என்ருங்கு ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம், நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது காட்டலாகாப் பொருள என்ப'' எனவரும் தொல்காப்பியப் பொருளியல் நூற்பா,

''அப்படியும் அந்நிறமும்
அவ் வண்ண மும்
அவன்அருளே கண்ணுகக்
காணின் அல்லால்,
இப்படியன் இந்நிறத்தன்
இவ்வண்ணத்தன் இவன்இறைவன்
என்று எழுதிக்
காட்டொ ணுதே''

எனத் திருநாவுக்கரசர் பெருமான் அருளிச் செய்த திருமொழியின் பொருளை வலியுறுத்தல் காணலாம். அன்பு அறிவு ஆற்றல் அருள் முதலிய பண்புகள் எங்ஙனம் நெஞ்சுகொளின் அல்லது காட்டலாகாப் பொருள்களாகத் திகழ் கின்றனவோ, அங்ஙனமே இறைவனும் இலங்கு கின்றுன் என்பது, ஒப்புயர்வற்றதோர் அரும் பெறற் சமய தத்துவ உண்மையாகப் போற்றப் படுதற்குரியதன்றே?

## முடிவுரை

இங்ஙனம் நுணுகி ஆராய்ந்தால், தொல் காப்பியம் என்னும் நம்முடைய பழம்பெருந் தமிழிலக்கண நுலின்கண், சமய தத்துவ நுண் பொருள்கள் பற்பல காணப்படுதலை யாவரும் உணரலாம். எனவே சமய வுண்மைகளும், தத்துவக் கருத்துக்களும், மிகவும் பிற்காலத்தில், வேற்றுவரானேயே, தமிழ்மக்களிடையிற் புகுத் தப் பெற்றன என்று ஒரு சிலர் கூறி வருவது உண்மைக்குப் புறம்பானதென்பதும்; உயரிய சமய வுண்மைகளும், நுண்ணிய தத்துவக் கருத் துக்களும், மிகப் பழங்காலத்திலேயே தமிழ் மக்களிடையே நிலவி வந்தன என்பதும்; அவை கள் நம்முடைய தமிழினத்தின் நுண்மாண் நுழைபுலனையும், கலைநாகரிகப் பண்பாட்டு நலங் களையும், மலையிலக்கென விளக்கும் அரும்பெரும் சான்றுகளாம் என்பதும் பிறவும், ஐயுறவின்றித் தெளியப்படும்.

## தொல்காப்பியச் சிறப்பு :

தொல்காப் பியம்என்னும் தொன்மைப் பெருநூலின்
ஒல்காப் பெருஞ்சிறப்பை உய்த்துணரின்—அல்கா
தறிதோ றறியாமை ஆழ்ந்தகன் றேங்கித்
தொடுவானம் போற்செல்லும் சூழ்ந்து! (1)

பழமை பெருமைநூற் பண்பனைத்தும் வாய்ந்து
விழுமியர்கள் எல்லாம் வியப்ப—முழுமணியாய்ச்
செந்தமிழ்க்கே ஓர்சிறந்ததெய்விகநூலாய்விளங்கும்
நந்தம் அருந் தொல்காப் பியம்! (2)

மொழிகள் பலப்பலதாம் மூதுலகில் உண்டு!
ஒழிவில் இலக்கணமும் உண்டு—வழிமுறையே
என்றாலும், தொல்காப் பியம்போல் இலக்கணநூல்
ஒன்றேனும் இவ்வுலகத் தில்! (3)

வழுத்துபெரு மாண்புடைய மற்றை மொழிகள்
எழுத்தொடு சொல்லின் இயல்பே—முழுத்தும்
எடுத்துரைக்க மாட்டா திணைப்பப் பொருளும்
தொடுத்துரைக்கும் தொல்காப் பியம். (4)

பாணினியார் நூற்செறிவும், பண்பார்பதஞ்சலியார்
காணிய திட்பக் கருத்தியலும்—சேணிய
சீர் அரித்தாட்டில்சொற்றெளிவும், அளவையும்சால்
பேரெழிற்றும் தொல்காப் பியம். (5)

ஐந்தெனும்பல் லாயிரமாம் ஆண்டுகட்கு முன்னரே
செந்தமிழில் அன்றிச் சிறந்குமிதும் இந்தவகை
நாகரிகத் தெய்வநல நல்லறிவு நூல்களொன்றுண்
டாக, நினைப்பவும்யார்க் காம்? (6)

—ஆசிரியர்.

---




பொய்யாத மொழியும், மயல் செய்யாத செயலும், வீண்
போகாத நாளும், விடயம்
புரியாத மனமும், உட் பிரியாத சாந்தமும்,
புந்தி தளராத நிலையும்,
எய்யாத வாழ்வும், வேறு எண்ணுத நினைவும், நினை
என்றும் மறவாத நெறியும்,
இறவாத தகவும், மேற் பிறவாத கதியும், இவ்
ஏழையேற்கு அருள்செய் கண்டாய்!
கொய்யாது குவியாது குமையாது மணம் வீசு
கோமளத் தெய்வ மலரே!
கோவாத முத்தமே! குறையாத மதியமே!
கோடாத மணி விளக்கே!
ஐயானனம் கொண்ட தில்லையம்பதி மருவும்
அண்ணலார் மகிழும் மணியே!
அகிலாண்டமும் சராசரமும் ஈன்றருள்
பரசிவானந்த வல்லி உமையே

—இராமலிங்க அடிகளார்.

# அருள்மிகு தண்டாயுதபாணிசுவாமி திருக்கோயில், பழனி.

| தரிசனம் | சாதாரண நாட்களில் ரூ. | திருவிழாக் காலங்களில் ரூ. |
|---|---|---|
| 1. மலைக்கோயில் : | | |
| பூசை வகையறுக்களுக்கு ... | | |
| **நுழைவு :** | | |
| 1. நுழைவு (அர்த்தமண்டபத்திற்கு அருகில்) நபர் 1-க்கு ... | 1.00 | 1,00 |
| 2. சிறப்பு அனுமதி (அர்த்தமண்டபம் அருகே) ... | 10.00 | 10.00 |
| 3. விழாப் பூசை ... ... ... ... | 2.00 | 2.00 |
| 4. உச்சிக் காலம் ... ... ... ... | 2.00 | 2.00 |
| 5. சாயரட்சை ... ... ... | 2.00 | 2.00 |
| 6. இராக்காலம் ... ... ... ... | 2.00 | 2.00 |
| **அபிடேகம் :** | | |
| 1. பஞ்சாமிர்த அபிடேகம் (பால் உள்பட) ... | 10.00 | 10.00 |
| 2. பால் அபிடேகம் ... ... ... | 2.25 | 2.25 |
| 3. தீர்த்தம் ... ... ... ... | 1.50 | 1.50 |
| **அர்ச்சனை :** | | |
| 1. அஷ்டோத்திரம் ... ... ... | 1.00 | 1.00 |
| 2. சகஸ்ரநாமம் ... ... ... ... | 1.50 | 1.50 |
| 3. தீபாராதனை (சூடம் உள்பட) ... ... | 0.25 | 0.25 |
| **அலங்காரம் :** | | |
| 1. இராஜ அலங்காரம் ... ... ... | 10.00 | 10.00 |
| 2. வேட அலங்காரம் ... ... ... | 10.00 | 10.00 |
| 3. தங்கக் கவசம் .. . ... ... | 250.00 | 250.00 |
| **இதர இனங்கள் :** | | |
| 1. காவடிக் காணிக்கை ... ... ... | 1.00 | 1.00 |
| 2. காது குத்து ... ... ... ... | 1.00 | 1.00 |
| 3. பள்ளியறை தீவட்டி ... ... ... | 3.00 | 3.00 |
| 4. பள்ளியறை வெண்சாமரம் ... ... | 1.00 | 1.00 |
| 5. அபிடேக பஞ்சாமிர்தம் (கிலோ 1-க்கு) ... ... | 4.00 | 4.00 |
| 6. ஆண்டவரைத் தங்க ரதத்தில் புறப்பாடு செய்ய ... | 750.00 | 750.00 |
| 7. ஆண்டவரைத் தங்க மயில் வாகனத்தில் புறப்பாடு செய்ய | 200.00 | 200.00 |
| 8. முடி காணிக்கை ... ... ... | 1.25 | 1.25 |

தங்கும் வசதிகளுக்குத் திருக்கோயில் சத்திரம், தண்டபாணி நிலையம் ஆகிய இரு இடங்களில் வசதி மிக்க அறைகள் சேவார்த்திகளுக்குக் குறைந்த வாடகையில் கிடைக்கும்.

5—6—74.

(ஒம்.) வி. எஸ். கோதண்டபாணி, B.Sc.,B.L.,
துணை ஆணையர்—நிர்வாக அதிகாரி.

# மதுரைக் கலம்பகம்

ந.ரா. முருகவேள்

## முன்னுரை

அமிழ்தினும் இனிய நமது தமிழ் மொழியின்கண் உள்ள பல்வேறு சிற்றிலக்கிய வகைகளில் கலம்பகம் என்பது ஒன்று. புயவகுப்பு மதங்கு அம்மானை காலம் சம்பிரதம் கார் தவம் குறம் மதம் பாண் களி சித்து இரங்கல் கைக்கிளை தூது வண்டு தழை ஊசல் முதலிய பல்வேறு அமைப்புடைய செய்யுள் வகைகளும், பிறவும் அமைந்து கலந்து வருமாறு இயற்றப்படும் சிற்றிலக்கியம், கலம்பகம் எனப் பெயர் பெறும். பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடிய திருவரங்கக் கலம்பகம், சைவ எல்லப்ப நாவலர் பாடிய திருவருணைக் கலம்பகம், இரட்டைப் புலவர்கள் இயற்றிய திருவாமாத்தூர்க் கலம்பகம், சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய திருவெங்கைக் கலம்பகம், பெருங் கவிஞர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இயற்றிய வாட்போக்கிக் கலம்பகம் முதலியன போல, குமரகுருபர அடிகள் அருளிச் செய்த மதுரைக் கலம்பகம் என்னும் நூலும், தமிழ் இலக்கியங்களுள் மிக்க புகழும் சிறப்பும் பெற்ற தொன்றாகும். அதன்கண் அமைந்துள்ள ஒரு சில சுவையான செய்யுட்களின் பொருளை மட்டும், இங்குக் கண்டு அமைவோம்.

## சொக்கர்

தலைவி தலைவன்பால் கிளியைத் தூது விடுவதாக வரும் துறையில் அமைத்து, மீனாட்சி சுந்தரேசுவரரின் பெயர்களைப் பின்வருமாறு அடுக்கித் தொகுத்து அழகுறப் பாடி, நம்மையெல்லாம் சொக்க வைக்கின்றார் குமரகுருபர அடிகளார்!

''புழுகுநெய்ச் சொக்கர், அபிடேகச்
சொக்கர், கர்ப்பூரச் சொக்கர்,

அழகிய சொக்கர், கடம்ப
வனச்சொக்கர், அங்கயற்கண்

தழுவிய சங்கத் தமிழ்ச்சொக்கர்,
என்றென்று சந்ததம்நீ

பழகிய சொற்குப் பயன்தேர்ந்து வா,
இங்குஎன் பைங்கிளியே''

## கற்பகமும் பசுங்கொடியும்

மதுரை மாநகரில் கோயில் கொண்டுள்ள உலக அன்னையாகிய மீனாட்சியம்மை, தன்னை அன்பினால் வழிபடும் அடியவர்களுக்கு, அவர்கள் வேண்டுவன எல்லாவற்றையும், எளிதாகவும் இனிதாகவும் முழுதாகவும் விரைந்து அளிக்கும் திறனை, ஓர் அழகிய பாடலில் குமரகுருபர அடிகள் சுவை பெருகக் குறிப்பிடுகின்றார். ''மனமே! நீ ஏன் கவலைப் பட்டு வருந்துகின்றாய்? வண்டுகள் ஒலிக்கின்ற கடப்பங்காட்டில் (மதுரையில்), ஒரு கற்பக மரம் (சிவபெருமான்) எழுந்தருளியிருக்கின்றது. அக் கற்பக மரத்தினைத் தழுவி, அதன் பக்கத்தில் ஒரு பச்சைப் பசுங்கொடி (மீனாட்சியம்மை) விளங்குகின்றது. அப் பச்சைப் பசுங்கொடி, தன் பால் அன்புடன் வந்து புகல் அடைந்தவர்களுக்குத் தேவர் உலகிலுள்ள ஐந்தருக்கள் — சிந்தாமணி — காமதேனு ஆகிய எல்லாவற்றையும் அளித்தருளும்! நீ அப் பச்சைப் பசுங்கொடியைச் சென்று அடைக. உனக்கு எல்லா நலங்களும் கிடைக்கும்'' என்கின்றார்.

''ஏன்நின்று இரங்குதி ஏழைநெஞ்சே!
வண்டிமிர் கடப்பங்

கான்நின் றதுவும், ஓர் கற்பகமே;
அந்தக் கற்பகத்தின்

பால்நின்ற பச்சைப் பசுங்கொடியே
முற்றும் பாலிக்குமால்;

தேன்நின்ற ஐந்தரு, சிந்தாமணியோடு
அத் தேனுவுமே''

## அஞ்சலித்தோம், அஞ்சலம்

''மீனாட்சியம்மையைத் தமது இடப்பாகத்தில் கொண்டுள்ள சுந்தரேசுவரப் பெருமானை, யாம் கை குவித்து அஞ்சலி செய்து வணங்கினோம். இனி யாம் எருமை (மயிடம்) வாகனத்தை இடங் கொண்டு ஊர்ந்துவரும் எமனுக்கும் கூட அஞ்சமாட்டோம்'' எனப் பிறிதொரு பாடலில் குமரகுருபரர் குதூகலித்துச் சொற்பொருட் சுவை அமையப் பாடி மகிழ்கின்றார்.

குங்குமச் சேறுடும் கொடிமாட வீதியில்,
சங்குமொய்க்கும் சங்கத் தமிழ்க்கடல்—அங்கயற்
கண்
அம்மை, இடங் கொண்டாரை அஞ்சலித்தேம் ;
அஞ்சலம்மற்று
இம்மயிடம் கொண்டார்க்கு இனி

மதுரைக் கலம்பகத்தில், மதுரை மாநகரில் சிவபெருமான் நிகழ்த்தி அருளிய பல்வேறு திருவிளையாடல்களைப் பற்றிக் குறிப்பிட்டுச், சொற்பொருட் சுவையும் கற்பனை நயமும் அமையக், குமரகுருபர அடிகள் பாடியிருத்தலைக் காண்கின்றோம். அப் பாடல்களின் கருத்தைச் சுருக்கமாக இங்கு நாம் கருத்திற் கொள்ளுதல் அமையும்.

### வளையல் விற்றது

*(1)* மதுரை மீனாட்சி சுந்தரேசுவரப் பெருமான் திருவுலாப் போதருகின்றார். அவர் தம் பேரழகினைக் கண்டு மயங்கிய மகளிரெல்லாம், அவர்பாற் காதலுற்று மெலிகின்றனர். அதனால் அவர்களின் கைவளைகள் கழன்று கீழே விழுகின்றன. அது கண்ட சிலர், ''வெற்றியை உடைய மழுவை ஏந்தியிருப்பவரே! வளையல் விற்பவரைப் போல வடிவு கொண்டு வந்து, தாங்கள் மதுரை மூதூரிலுள்ள குல மகளிர், தம் கைகளில் அணிந்துள்ள கை வளை எல்லாம் கொள்ளை கொள்கின்றீர். அதனால் நுமக்கு வளையல் வாணிபம் (செட்டு) வாய்த்து, மிகுதியாக ஊதியமும் கிடைக்கின்றது. இது மிகவும் அழகிது. பெண்களிடம் வளையல் விற்பதற்கு வந்தீர்களா? அல்லது அவர்களின்வளையல்களைக் கவர்ந்து கொள்ள வந்தீர்களா?'' எனப் பெருமானை வினவுகின்றனர் (8). கண்டோர் கூற்றாக அமைந்துள்ள இச் செய்யுளின்கண் வளையல் விற்ற திருவிளையாடல் குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

''வலங்கொண்ட மழுவுடையீர்! வளைகொண்டு
விற்பீர்போல் மதுரை மூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார் கைவளையெல்லாம்
கொள்ளை கொள்கின் றீரால்!
பலங்கொண்ட செட்டுஉமக்குப் பலித்தது
நன்றால்! நீர் இப்பாவை மார்க்குப்
பொலங்கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ?
கொள்வதற்கோ? புறப்பட் டீரே''

### தமிழ்ப் பெருமை

*(2)* ''சிவபெருமான் சவுந்திர பாண்டியன் எனவும், அம்பிகை தடாதகைப் பிராட்டி எனவும், முருகப் பெருமான் உக்கிர குமர பாண்டியர் எனவும், மதுரையில் தோன்றி அரசு புரிந்து அருளினர். அதற்குக் காரணம், அமிழ்தினும் இனிய தமிழ் மொழியின் அளப்பரும் இனிமைச் சுவையைக் கொள்ளை கொண்டு மிகுதியாக உண்ணவேண்டும் என்ற பெரு விருப்பமேயாகும் என்றால், தமிழின் பெருமையை யாரால் அளவிட்டு அறிதல் இயலும்?'' என மதுரைக் கலம்பகச் செய்யுள் ஒன்றில், குமரகுருபர அடிகள் கூறுதல் அறிந்து இன்புறற் பாலது.

''தமரநீர்ப் புவனம் முழுதொருங்கு ஈன்றாள்
தடாதகா தேவிஎன்று ஒருபேர்
தரிக்கவந் ததுவும், தனிமுதல் ஒருநீ
சவுந்தர மாறன் ஆனதுவும்,
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும், தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனில், இக்
கொழிதமிழ்ப் பெருமை யார் அறிவார்?''

### அங்கம் வெட்டினும் காயமில்லை

*(3)* கலம்பகத்தில் வரும் உறுப்புக்களில் ''அம்மானை'' என்பது ஒன்று. மூன்று மகளிர் தம்முள் விவாதம் செய்து கொண்டு, அம்மானை ஆடுவது போலச் செய்யுள் அமைத்தல், இதன் இலக்கணம். ''பிரமன் திருமால் ஆகிய இருவரும் காண இயலாத, மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர், வெற்றிக்குரிய சின்னங்களை அணிந்து, விருது கட்டி, சித்தன் என்பவனுடைய அங்கத்தைவெட்டி வெற்றி பெற்றார் என்றாள் ஒருத்தி. அங்கம் வெட்டி வெற்றி பெற்றது உண்மையாயின், இவருடைய அருமை உடம்பே இரு கூறுகளாக ஆயினமை எங்ஙனம்? என வினவினாள் அடுத்தவள். அதற்கு மூன்றாமவள் ஆண் பெண் என்னும் இரு கூறாக அமைந்திருந்தாலும், இவருக்குக் காயம் (தழும்பு, உருவம்) ஏதுமில்லை'' என்கின்றாள் *(14)*. இக் கருத்தமைந்த பாடற்கண் அங்கம் வெட்டினதிருவிளையாடல் குறிக்கப் பெற்றுள்ளது.

''இருவருக்கும் காண்பரிய ஈசர்மது ரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர்காண்
அம்மானை ;
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனரே ஆமாகில்,
அருமையுடம்பு ஒன்றுஇருகூறு ஆவதேன் அம்மானை;
ஆனாலும் காயம்இலை ஐயர்அவர்க்கு அம்மானை''

### மதுரை இது அன்றோ ?

*(4)* தலைவி ஒருத்தி காதல் நோயால் வருந்துகின்றாள். அதனால் அவளது உடல் வெப்பமுற்றுக் கொதிக்கின்றது. அது கண்ட தோழி, தலைவியின் உடலில் திருநீற்றைப் பூசி, இறைவனை வழுத்துகின்றாள். எனினும், தனது காதல் வெப்பம் தணியாததனால், தலைவி பின்வருமாறு கூறுகின்றாள். ''ஐயோ! நின்ற சீர் நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னனுக்கு அன்று மதுரையில் திருஞான சம்பந்தர் அணிந்த திருநீற்றை, இன்று நீ என் மீது பூசுகின்றாய். எனினும், என்னுடைய காதல் வெப்பம் (காம அனலம்) இன்னும் தணிந்திலதே? அன்று மதுரையில் சம்பந்தரின் திருநீற்றால், பாண்டியனின் உடற் கூன் நிமிர்ந்தது. ஆனால், இன்று என் மீது மலரம்புகளைத் தொடுத்து, இடை விடாது எய்கின்ற மன்மதனின் வில்லினுடைய கூன்(வளைவு) நிமிரவேயில்லையே! இப்போது நாம் வாழ்கின்ற இந்த மதுரை, அந்த மதுரை மாநகரம் தானா? அல்லது வேறொன்றா? இரண்டும் ஒன்றாக இருந்தால், ஏன் இந்த வேறு பாட்டு நிலை?'' எனத் தலைவி கூறுவதாக அமைந்துள்ளது ஒரு செய்யுள் *(66)*. இதன்கண், சம்பந்தர் பாண்டியனின் சுரந் தீர்த்த திருவிளையாடல் குறிக்கப் பெற்றிருத்தல் காண்கின்றோம்.

''ஆவா என்னே! தென்னவர் கோற்கன் றணிசாந்தம்
நீவா நின்றாய், நின்றில காமானலம்; என்னே?
கோவாம் வில்லி கொடும்தனுவும் கூன் நிமிராதால்!
மூவா முதலார் மதுரை இதன்றோ? மொழிவாயே''

## விழிக்கயலின் விலை

(5) கலம்பக உறுப்புக்களுள் வலைச்சியார் என்பது ஒன்று. மீன் விற்கும் வலை மகள் ஒருத்தியைக் கண்டு, அவள் பாற் காதல் கொண்ட ஓர் இளைஞன் கூறுவதாக அச் செய்யுள் அமைந்திருக்கும். ''சொல்லின் எல்லைக்கு அப்பாற்பட்டு, வேதாந்தமாகிய உபநிடதங்களின் முடிந்த முடிபாகிய சிவபெருமான் எழுந்தருளும் கூடல் என்னும் மதுரை மாநகரின்கண் வாழ்கின்ற, வலைஞர்களின் பெருஞ் செல்வ மகளாகத் திகழ்பவரே! நீவிர், உப்பங்கழியிலுள்ள கயல் மீன்களை விற்கின்றீர். கழிக் கயலை விற்கும் உங்களுடைய விழிக் கயலுக்கே (கண்ணாகிய மீனுக்கே) ஏழு உலகங்களையும் விலையாகத் தரலாம். தங்கள் கடைக்கண் பார்வையில் ஏழுலகமும் மயங்கி நிற்கும்'' என்னும் கருத்தமைந்த பாடலில் (67), வலை வீசின திருவிளையாடல் குறிப்பிடப் பெற்றுள்ளது.

மொழிக்கு அயலாகி வேத
முடிவினில் முடிந்துநின்ற
வழிக்கு அயலாகார் கூடல்
வலைவாணர் பெருவாழ்வுஅன்னீர்!
கழிக்கயல் விற்பீர்! மற்றுஇக்
காசினி ஏழும் உங்கள்
விழிக்கய லுக்கே முற்றும்
விலைஎன்று விளக்கிட்டீரே

## கயல் எலாம் அடைதல் கணக்கே

(6) மீனாட்சி சுந்தரேசுவரப் பெருமான் தனது மாமியாராகிய காஞ்சனமாலை கடல் நீராடும் பொருட்டு, மதுரையிலுள்ள ஒரு சிவ தீர்த்தத்தில் ஏழு கடலும் வருமாறு செய்தருளினார். முருகப் பெருமான் உக்கிர குமார பாண்டியனாகத் தோன்ற, அவருக்கு ஒரு வேலை (கடலை, வேற்படையை) வழங்கி, கடல் நீர் சுவறும்படி செய்தார். அது மட்டுமோ? அடியவர்களின் பிறவியாகிய கடலும் வற்றும்படி செய்தார். அதனால், 'தடாதகைப் பிராட்டியின் கண்களாகிய மீன்கள் மட்டுமோ, உம்மைக் காண்கின்ற பெண்களின் கண்களாகிய மீன்களெல்லாமும் கூட, உம்மையடைவது முறையேயன்றோ?'' எனச் சுந்தரேசுவரரிடம், கண்டோர் வினவுவது போல ஓர் அழகிய செய்யுள் அமைந்துள்ளது. (97).

பாமிக்குப் பயில்மதுரைப் பரஞ்சுடரே!
ஒருத்திகயற் பார்வை மட்டோ?
காமிக்கும் மடந்தையர்கட் கயல்எல்லாம்
உமையடைதல் கணக்கே யன்றோ?
மாமிக்குக் கடல்ஏழும் வழங்கினீர்!
ஒருவேலை மகனுக் கீந்து,
பூமிக்குட் கடலைவறி தாக்கினீர்!
பவக்கடலும் போக்கி னீரே!

''மாமிக்கு ஏழு வேலை வழங்கினர், மகனுக்கு ஒரு வேலை (கடலை, வேற்படையை) ஈந்தார்; ஏழு கடல் பெருகச் செய்தார். இரு கடல் (உவர்க்கடல், பிறவிக் கடல்) சுவறச் செய்தார்'' என்பது ஒரு வகைச் சொற் பொருள் நயம். அம்மையின் கண்கள் சிவபிரானின் திருமுகத்தை நோக்கி விரும்பி மகிழ்தல் போல, அவர் திருவுலாப் போதருங்கால் கண்டு காதலிக்கும் பெண்களின் கண்களெல்லாமும், மேலும் மேலும் அவர் தம் திருமுகத்தையே காண விழைந்து அதிற் படிந்து நிற்றலின், ''ஒருத்தி (மீனாட்சியம்மை) கயற் பார்வை மட்டோ? காதலிக்கின்ற மடந்தையரின் கண்களாகிய கயலெல்லாமும் உமை அடைதல் கணக்கேயன்றோ'' என்றார். இதன்கண் எழுகடலழைத்த திருவிளையாடல், கடல் சுவறச் செய்த திருவிளையாடல், வலைவீசிய திருவிளையாடல் முதலியன குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

## உலவாக்கோட்டை.

(7) அடியார்க்கு நல்லான் என்னும் ஒரு வேளாளனுக்கு, ஒரு சமயம் மதுரைச் சொக்கேசர், எடுக்க எடுக்கக் குறையாத நெற்கோட்டையை அளித்தருளினார். இஃது உலவாக் கோட்டை அருளிய திருவிளையாடல் எனப்படும். காதல் கொண்டு வருந்தும் தலைவி ஒருத்தியின் கூற்றாக அமைந்த செய்யுள் ஒன்றில், இதனைக் குமரகுருபர அடிகள் அழகுறக் குறிப்பிட்டுப் பின் வரும் கருத்தமையப் பாடுகின்றார். ''கடம்ப வனமாகிய மதுரையிலுள்ள சொக்கேசரே! முன்னொரு காலத்தில் தாங்கள் தங்கள் அடியவர் ஒருவருக்கு உலவாக் கோட்டை நெல்லை அளித்தீர். அதுபோல, தாம் விரும்பிய காதலரை அடையப் பெறாது வருந்தும் கற்பு நெறிக் காதல் மகளிர் மீது, மலரம்புகளைத் தொடுப்பதற்காக, மன்மதனுக்கு ஓர் உலவாத அம்பு அறாத் தூணியையும் தாங்கள் கொடுத்தீர் போலும்! அவன் எடுக்கும் கணை ஐந்தே ஆயினும், அவைகள் எண்ணத் தொலையாத அளவு மிகுதியாக இருக்கின்றனவே! நான் என் செய்வேன்? முன்னொரு காலத்தில் தந்தையாகிய திருமால் திடுக்கிட்டு அஞ்சும்படி, காமனைச் சினந்து கண் அழலால் காய்ந்து எரித்தீரே! இப்போதும் அவனை அங்ஙனம் செய்தலாகாதா? என்பது அப்பாடலின் திரண்ட கருத்து, அப் பாடல் வருமாறு :

அடுத்தங்கு உலவாக் கோட்டைசுமந்து
அளித்தீர் ஒருவற்கு ; அது நிற்கத்
தொடக்குங் கணைவேள் தனக்குஉலவாத்
தூணி கொடுத்தீர் போலுமால்!
எடுக்குங் கணைஐந்து, எய்தகணை
எண்ணத் தொலையா! என்செய்கேன்?
திடுக்கங் கொளமால் சிலைமதனைச்
சினத்தீர், கடம்ப வனத்தீரே

## பணையும் குருவும்

(8) கலம்பக உறுப்புக்களிற் களி என்பது ஒன்று. கட்குடியர் கள்ளையும், அஃது உண்டாகும் பனை முதலியவற்றையும் சிறப்பித்துக் கூறுவது போல, களி என்னும் உறுப்பு பாடப் பெறும். ''அழகிய மதுரையிலுள்ள மதுரேசனைத்

தேவர்களுக்கெல்லாம் தலைவன் என்னும் பொருளில் அமரேசன் என்றும் உலகம் புகழ்ந்துரைக்கும். மதுரேசன் மதுரை நகர்க்குத் தலைவர் மட்டுமல்லர்; 'மதுரை' என்னும் கள்ளை விரும்பும் ஈசரும் ஆவர். மதுரேசர் ஆனமையால்தான், அவர் அமரேசர் (மரணமில்லாத தேவர்களுக்குத் தலைவர்) ஆனார். கள் உண்டால் இறவாத இன்ப வாழ்வு பெறலாம். இத்தகைய சிறப்பு மிக்க கள்ளை, காலை மாலை ஆகிய ஒவ்வொரு போதுக்கும் இரண்டு கலம் ஊற்றெடுத்து அளிக்கின்ற பனை மரத்தினை, நாம் போற்றி வணங்கத் தக்க குருமூர்த்திக்குச் சமமாகவும் சாற்றலாம். எங்ஙனமெனில் குருமூர்த்தியை அடைந்து பழகுபவர்கள் அடைவது போல, இப் பனை மரத்தை ஏறிப் பழகுபவரும் சான்றாண்மை பயின்றவராவார். குருவின்பால் தினமும் பழகி வந்தால், நல்ல பயன் உண்டு. அதுபோல இப் பனை மரத்தின் பயனாகிய சாற்றைத் தினமும் உண்ணப் பழகி முயன்றால், உடற் பலம் உண்டாகும். கள்ளை உண்பவர்கள் தான் அதன் சிறப்பை உணர்வார்கள். குருமூர்த்தியிடம் பல கலைஎழுதப் பெற்ற பல ஏடுகள் (நூல்கள்) உண்டு. அதுபோல இப் பனை மரத்தினிடம் பலகலை நூல்களை எழுதுதற்கு ஏடுகள் உண்டு. குரு வீடு பேற்றைத் தருவார்; வீடு கட்டுதற்குப் பனை மரம் ஓலைகள் உதவும். குரு எழுதாத நூலாகிய வேதத்தினின்று திருமந்திர உபதேசம் செய்வார். பனையும் எழுதப்படாத திருமந்திரம் (கள்) தரும். இத்தகைய பல ஒப்புமைகளால் பனை மரத்தினைக் குருமூர்த்திக்கு ஒப்பாகச் சொல்லுதல் பொருந்தும்'' என்னும் கருத்தமையப் பின் வரும் பாடலால் சுவை பெருகப் பாடியிருத்தல் போற்றற்பாலது.

''அழகுற்றதோர் மதுரேசனை அமரேசன் எனக் கொண்டு, ஆளும் களியால் நின்று இசை பாடும் களியேன் யான்; பொழுதைக்கு இரு கலம் ஊறு பைந்தேறற் பனையினை, நாம் போற்றிக் குருமூர்த்திக்கு இணை சாற்றத்தகும் அப்பா! பழுது அற்றதோர் சான்றாண்மை பயின்றார், தினம் முயன்றால் பலமுண்டு; அதன் நலம் உண்டவர் அறிவார்; பல கலை நூல் எழுதப்படும் ஏடு உண்டு ; அது வீடும் தரவற்றால்; எழுதாத ஓர் திருமந்திரம் இளம் பாளையுள் உண்டே''.

**சம்பிரதம்**

(9) சம்பிரதம் என்பது கலம்பக உறுப்புக்களுள் ஒன்று. இந்திர சால வித்தையில் வல்லவன், தன் ஆற்றலையும், தான் செய்யக்கூடிய செயல்களின் திறத்தையும், தானே புகழ்ந்து கூறுதல்போல, இதனைப் பாடுவது கவிதை மரபு. செய்தற்கு எளிய செயல்கள், செய்வதற்கு அரிய செயல்கள் எனப் பொருள்படுவதற்கு ஏற்ற சொற்களை அமைத்துப் பாடுவது, இதன் சிறப்பும் நயமும் ஆகும். இந்திர சால வித்தையில் வல்ல ஒருவன் பின்வருமாறு கூறுகின்றான் : ''எல்லையற்ற கடலால் சூழப்பட்ட இவ் உலகம் அனைத்தையும் கண்மூடித் திறக்கும் நேரத்தில் யான் மறைப்பேன். பிறகு வெளிப்படுத்துவேன். எட்டு மலைகளையும், கடலையும் (சமுத்திரத்தையும்), யான் என் முட்டி (மூடிய கை)யினுள்ளே அடக்கிவிடுவேன். எனக்கு இவைகளெல்லாம் அரிய பெரிய செயல்கள் அல்ல! மன்மதனை எரித்த மதுரைச் சொக்கேசனின் எண்குணங்களையும், சைவ நாயன்மார்கள் போன்ற சான்றோர்கள் துதிக்கின்ற அவர்தம் பெருமைகள் அனைத்தையும், ஒரு செப்பில் (பாத்திரம், சொல்லில்) அடக்கி விடுவேன்'' எனக் கூறுவது போலச் சம்பிரதம் என்னும் உறுப்பில் கவிஞர் கவினுறப் பாடுகின்றார். இவைகள் அரும்பெரும் செயல்கள் போலத் தோன்றுகின்றன! ஆயினும் கவிதையிலுள்ள சொற்களின் அமைப்பைக்கூர்ந்து கவனித்தால், இவையனைத்தும் எளிய செயல்களே என்பதை உணரலாம். கண்ணை ஒருமுறை இமைத்தால் உலகம் முழுவதும் மறையும் பிறகு வெளிப்படும். ''எள், துவரை, கடலை'' எனப் பிரித்துப் பொருள் கண்டால், ''எட்டு வரையைக் கடலை முட்டியுள் அடக்கிடுவன்'' என்றது, எளிய செயலே யாதலைக் காணலாம். 'ஓர் செப்பில் அடக்கிடுவேன்' என்பதில், 'செப்பு' என்பதற்குப் பிரணவம் ஆகிய சொல்லில் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். இறைவனின் எண் குணங்களும், சமயாசிரியர்கள் பாடியுள்ள இறைவனின் புகழ் நலங்களும் ஆகிய அனைத்தும் பிரணவத்துள் அடங்கிவிடும் என்பது, உண்மையும் எண்மையுமாதல் உணரலாம்.

**முடிவுரை**

இங்ஙனம் இன்னும் எத்தனையோ பல, சிறந்த கருத்துக்கள் பொதிந்த அழகிய இனிய செய்யுட்கள், மதுரைக் கலம்பகத்தின்கண் குமர குருபர அடிகளால் அருளிச் செய்யப் பெற்று உள்ளன. நவில்தொறும் நூல் நயம் பயக்கும் இனிய அக் கவிதைகளையெல்லாம், நாம் பெரிதும் பயின்று போற்றிப் பயன்கொண்டு உய்வோமாக!



# செய்திச் சுருக்கங்கள்!...

**சேக்கிழார் விழா :**

சென்ற ஞாயிறன்று (26—5—74) சேக்கிழாரின் குரு பூசை விழா, குன்றத்தூரில் சேக்கிழார் மன்றத்தால் கொண்டாடப் பெற்றது. அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களது வரலாற்று நூலாகிய பெரிய புராணத்தைப் பன்னிரண்டாவது சைவத் திருமுறையாகப் பாடிய சேக்கிழார் என்னும் சோழ நாட்டு அமைச்சரது பிறந்த ஊராகிய குன்றத்தூர், சென்னைக்குத் தென் மேற்கே பன்னிரண்டாவது கல்லில் உள்ளது. அந்நூல் பாடப் பெற்ற காலம் பன்னிரண் டாம் நூற்றாண்டு.

அக்காலத்துச் சோழ மன்னர், அநபாய சோழர் என்னும் இரண்டாம் குலோத்துங்கச் சோழர் (கி.பி. 1135—1150) ஆணையின்படி, சேக்கிழாரால் பாடப்பெற்ற இப் பெரிய புராண நூலினை ''உலகெலாம் உணர்ந்து ஓதி'' யறிதற் பொருட்டு, இப்போது பொள்ளாச்சித் தொழில் அதிபர், அருட்செல்வர் வள்ளல் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் ஆதரவில், திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் ஆங்கிலச் செய்யுட்களால் மொழியாக்கம் செய்து வருகிறார்கள். அந்நூலில் சுமார் ஓராயிரம் செய்யுட்கள் வரை இதுவரை மொழியாக்கம்செய்யப் பெற்றுள்ளன. இத்தொண்டினைப் பாராட்டிச் சேக்கிழார் கழகத்தார், குரு பூசை நாளன்று, வள்ளல் திரு. நா. மகாலிங்கம் அவர்கட்கும், திருவாசகமணி அவர்கட்கும், சேக்கிழார் பெருமானின் அபிடேக ஆராதனை வழிபாட்டிற்குப் பின் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தனர்.

வித்துவான் மறை. திருநாவுக்கரசு, திரு. நா. மகாலிங்கத்திற்கும்; கபாலீச்சரம் (உதவி ஆணையர்) நிருவாக அலுவலர் திரு. த. நாகராசன் திருவாசகமணிக்கும், முறையே பொன்னாடை போர்த்தினர். இந்நூல் 1974-ஆம் ஆண்டு இறுதியில் வெளியிடப்பெறும். இதற்கு முன்பு, திரு வாசகத்தையும், திருக்குறளையும், ஆங்கிலப் பாக்களில் அழகுற வடித்தளித்தவர் திருவாசகமணி என்பது, அனைவரும் அறிந்ததேயாகும்.

அன்றிரவு திருவாசகமணியின் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், மலாயா நாட்டைச் சார்ந்தவரும், இலங்கையில் திருவாசகமணி மூலம் சேக்கிழார் பெருமையைச் சிறப் புறப் பரப்பியவருமான திருவருட்செல்வி, சரளாதேவி ராஜசுந்தரம் அம்மையார்க்குச் சேக் கிழார் மன்றத்தாரால் ''மங்கையர்க்குத் தனி அரசி'' என்ற சிறப்புப் பட்டம் வழங்கப்பெற்றது. திரு. என். ஆர். முருகவேள் அவர்களுக்குப் ''புலவரேறு'' என்ற பட்டம் வழங்கப் பெற்றது.

**ஊனமுற்றோர் உதவி நிதிக்கு ரூபா ஐந்து இலட்சம் :**

தமிழக முதலமைச்சர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் பிறந்த தினத் தன்று, உடல் ஊனமுற்றோர் நல்வாழ்வுக்காகச் சுமார் ஒரு கோடி ரூபா அளவில் திட்டம் தீட்டிச் செயலாக்கிட மாண்புமிகு. முதலமைச்சரின் நிதிக்காகத் தமிழ்நாடு இந்து சமய அறநிலையங்களின் சார்பில் ஐந்து லட்சத்து ஆயிரத்து இருபத்தைந்து ரூபாய்க்கான காசோலை யினை, அற நிலைய அமைச்சர் மாண்புமிகு திரு. மு. கண்ணப்பன் அவர்கள், மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்களிடம் அளித்தார்கள். அற நிலையத் துறை ஆணையர் திரு. கே. எஸ். நர சிம்மன் அவர்களும், துணை ஆணையர்கள் திரு. வெங்கடாசலம், திரு. இராஜா ஆகியோரும் உடன் இருந்தனர்.

**கோயில் திருப்பணிகள் :**

தமிழக இந்து சமய அறநிலையத்தின் சார்பில், திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலயத்தின் வெளிப் பிராகாரமும், மதுரை அருள்மிகு மீனாட்சிசுந்தரேசுவரர் கோயிலின் கோபுர விமானமும், திருவண்ணாமலை அருள்மிகு அருணாசலேசுவரர் கோயில், திருவில்லிப்புத்தூர் அருள்மிகு வடபத்திரசாயி கோயில், ஆகியவற்றின் திருப்பணிகளும், இவ்வாண்டில் சுமார் இருபது இலட்சம் (20,00,000) ரூபா செலவில் செய்வதற்கு மேற்கொள்ளப்பட இருக்கின்றன.

மற்றும் ஐந்து இலட்சம் (5,00,000) ரூபா செலவில், காஞ்சிபுரம் அருள்மிகு காமாட்சி யம்மை கோயில் திருப்பணி நடைபெற்று வருகின்றது. பழநி, திருத்தணி ஆகிய தலங்களில் பக்தர்கள் தங்குவதற்குரிய வசதிகளை விரிவுபடுத்துவதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வரு கின்றன. பழநியில் பத்தொன்பது இலட்சம் (19,00,000) ரூபா செலவில், 108 அறைகள் கட்டுவதற்குரிய அநுமதி முன்பே வழங்கப்பட்டிருக்கின்றது.

திருச்சி மலைக்கோட்டை அருள்மிகு தாயுமானவ சுவாமி கோயில், சோளிங்கபுரம் அருள்மிகு இலட்சுமி நரசிம்ம சுவாமி கோயில், திருச்செங்கோடு அருள்மிகு அர்த்தநாரீசுவர சுவாமி கோயில், திருக்கழுக்குன்றம் அருள்மிகு வேதகிரீசுவர சுவாமி கோயில் ஆகியவற்றுள் ஒவ்வொன் றிற்கும் ஐந்து இலட்சம் முதல் ஆறு இலட்சம் ரூபா வரையில் செலவு செய்து, யாத்திரீகர்களின் வசதிக்காக, சப்பான் நாட்டில் இருந்து ''விஞ்ச்'' இயந்திரங்கள் இறக்குமதி செய்வதற்கு, மத்திய அரசின் அநுமதி கேட்கப்பட்டுள்ளது.

திருவாரூர், திருநாகேசுவரம், திருவரங்கம், திருநெல்வேலி, திருவண்ணாமலைக் கோயில் ஆகியவற்றின் திருப்பணிகளுக்காகத் தனித் தனியே ஒரு இலட்சம் ரூபா மானியத் தொகையைத் தமிழக அரசு வழங்கியிருக்கின்றது. மதுரை மாவட்டம் அழகர்கோயில், பழமுதிர் சோலைக் கோயிலுக்கு நல்ல கற்சாலை அமைக்கும் பணி, விரைவில் நிறைவு பெறும் நிலையில் உள்ளது.

அருள்மிகு இராமேசுவரம் கோயில் திருப்பணிக்கு, யுனெஸ்கோ நிறுவனத்தினர், பத்தாயிரம் (10,000) டாலர் நிதியுதவி புரிந்துள்ளனர். இத் திருப்பணி அடுத்த ஆண்டின் இறுதியில் நிறைவு பெறும் என்று எதிர் பார்க்கப்படுகின்றது.

யுனெஸ்கோ நிறுவனத்தினர், இதற்கு முன்னரே திருவரங்கம் அருள்மிகு அரங்கநாத சுவாமி கோயில் திருப்பணிக்கு உதவிகள் புரிந்துள்ளனர். மேலும் இப்போது சிதம்பரம் அருள்மிகு நடராசர் கோயிலுக்கும், காஞ்சிபுரம் தேவராச சுவாமி கோயிலுக்கும், யுனெஸ்கோ நிறுவனத் தின் உதவி கேட்கப்பட்டுள்ளது.

# நெல்லையப்பர் கோயிற் குடமுழுக்கு விழா

திரு. ப. இலக்குமணன் அவர்கள்,

அறங்காவலர் குழுத் தலைவர், திருப்பணிக்குழு உதவித்தலைவர், அருள்மிகு நெல்லையப்பர் கோயில், திருநெல்வேலி.



அருள்மிகு நெல்லையப்பர் காந்திமதிக்குக் குடமுழுக்கு விழா—நெல்லையின் வரலாற்றிலே இது ஒரு பொன்னுள்! வரலாற்றுச் சிறப்பு மிக்க நன்னுள்! எத்தனை பெரிய காரியம் எவ்வளவு எளிதில் நடந்து முடிந்து இருக்கிறது! பார்ப்பவர்கள் எல்லாம் பரவசம் அடைகிருர்கள். 'அடேயப்பா' என்று வியந்து கண்களை அகல விரிக்கிருர்கள்.

ஆனல் அன்று காதால் கேட்டவைகளை நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை என்னல்! 'ஆட்சிக்கு வந்தவர்கள் யார்? கறுப்புச் சட்டைக் காரர்களா? இனி கோவில்கள் அவ்வளவுதான். இங்கே நெல்லையப்பர் கோவில் அறங்காவலர் தலைவர் இலக்குமணனு? தி.மு.க.வில் அவர் ஊறித் திளைத்தவர் ஆயிற்றே! நெல்லையப்பர் நந்தி, ரோட்டை மறைக்கிறது என்று நகர்த்தி வைத்து விடுவாரோ என்றெல்லாம் பேசினர்கள், கேட்டு இருக்கிறேன். ஆனல் இன்று அவர்களே, நடந்து முடிந்து இருக்கும் திருப்பணி வேலைகளைக் கண்டு வியக்கிருர்கள், திகைக்கிருர்கள்.

**முதல் திருப்பணி :**

திருக்கோவில் கட்டி முடித்த பிறகு முழு அளவில் முதல் திருப்பணி இப்போதுதான் நடந்து இருக்கிறது என்றே சொல்லலாம். அதுவும் சமீப கால நூற்ருண்டில் நெல்லை மாவட்டத்தில் திருச்செந்தூர் முருகன் கோவிலை அடுத்துத் திருப்பணி நடந்த கோவில் இதுதான், தமிழ்நாட்டைப் பொறுத்த வரை பழனி, மதுரை போன்ற கோவில்களில் பெரிய அளவில் திருப்பணி நடத்தி உள்ளார்கள். ஒரு வித்தியாசம் — அவை வருமானம் அதிகம் உள்ள கோவில்கள் ; திருப்பணி நடத்தியவர்களும் சர். பி.டி. ராஜன் போன்ற பிரபலமானவர்கள். ஆனல் நெல்லையைப் பொறுத்தவரை இந்தக் கோவிலின் வருமானம் மிகவும் குறைவு! நாங்களும் மிக மிகச் சாமானியர்கள்!

அரசாங்கத்தைப் பொறுத்தவரையில், அவர்கள் செய்த உதவியும், ஒத்துழைப்பும் தான் இவ்வளவு விரைவில் இந்த வேலைகள் முடிவடைவதற்குக் காரணமாக அமைந்து இருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் அறநிலைய ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்மனின் உதவியைச் சொல்லித்தான் தீர வேண்டும். திருப்பணி வேலையைத் தொடங்கத் திட்டமிட்டு இருக்கிறேம் என்று நாங்கள் சொன்ன உடனேயே அறநிலைய ஆணையர், பொது நிதியில் இருந்து 25 ஆயிரம் ரூபாயை வழங்கினர்கள். யாருக்கு வரும் இந்த எண்ணம்? 'பணம் இல்லை என்று திருப்பணி வேலைகள் நின்றுவிடக் கூடாது. எவ்வளவு பணம் வேண்டுமானுலும் தருகிறேன்' என்று உறுதி அளித்தவர் நமது அறநிலைய ஆணையர் திரு. நரசிம்மன் அவர்கள். அடுத்து எங்களுக்குத் துணை நின்றவர் உதவி ஆணையர் திரு. முருகேசன் அவர்கள். திருப்பணி நன்கு நடைபெற இவர்கள் இருவரும் அளித்த ஒத்துழைப்பை மறக்க முடியாது. கோபுரத்தைப் பார்த்தவுடன் இவர்கள் நினைவு வரும் நெல்லை மக்களுக்கு. அற நிலையத் துறை மேற்பார்வைப் பொறியாளர் திரு. கிருஷ்ணமூர்த்தி, உதவிப் பொறியாளர் திரு. வேணுகோபால் ஆகியோரின் நுட்ப உதவியும் சிறப்பானது.

திருப்பணி வேலையைத் தொடங்கிவைத்தவர் மாண்புமிகு அறநிலைய அமைச்சர் திரு. கண்ணப்பன் அவர்கள். அவர் தொட்டது துலங்கும்—கைபட்டது மலரும். வேலை 'மளமள' என்று வளர்ந்ததற்கு அதுவும் காரணம்.

எல்லாவற்றிற்கும் மேலானது மாண்புமிகுமுதல் அமைச்சர் கலைஞர் கருணாநிதி எங்களுக்கு அளித்த உற்சாகமும் ஒத்துழைப்பும். திருப்பணி வேலைகளுக்காக 75 ஆயிரம் ரூபாயும் கலைக் கூடம் அமைப்பதற்காக 1 லட்சம் ரூபாயும் அரசு வழங்கியுள்ளது.



**கோயில்கள் :**

புகழ்பெற்ற தமிழ் நாட்டுக் கோவில்கள் அளித்த நன்கொடைகளும் ஏராளம். திருச்செந்தூர் சுப்பிரமணிய சுவாமி கோவில் ரூ. 30 ஆயிரம், பழனி கோவில் ரூ. 30 ஆயிரம், மதுரை மீனாட்சி அம்பாள் கோவில் ரூ. 5 ஆயிரம், பண்பொழி திருமலைக் குமாரசுவாமி கோவில் ரூ. 2 ஆயிரம் என்று வாரி வழங்கி இருக்கிறார்கள் அதன் நிர்வாகிகள். நெல்லை மாவட்டத்தில் உள்ள எல்லாக் கோவில்களில் இருந்தும் நன்கொடைகள் வரப்பெற்றோம். அந்த வகையில் கிடைத்த தொகை ரூ. 55 ஆயிரம்.

கோவில் திருப்பணியில் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் உதவியைப் பற்றித் தமிழ் நாட்டு மக்களுக்குச் சொல்லித் தெரிய வேண்டியது இல்லை. கோவில் திருப்பணிக் குழுத் தலைவரே அவர்தான். அவர் மூலம் திருப்பணி பெற்ற கோவில்கள் எத்தனையோ? அவற்றுள் இதுவும் ஒன்று. அவர் வசூல் செய்து அளித்த தொகை 1 லட்சத்துக்கு மேல்.

நெல்லை மாவட்ட மக்களும், மற்ற மாவட்ட மக்களும் அளித்த நன்கொடைகளும் ஏராளம். கேட்பானேன். கொடுத்துப் பழகிய கைகள் அல்லவா அவர்களுடையவை. நன்கொடைகள் மட்டுமா நல்கினார்கள்? பலர் திருப்பணி வேலைகளுக்கே பொறுப்பு ஏற்றுக் கொண்டார்கள்.

**கோபுர கலசம் :**

இதுவரை சுவாமி—அம்பாள் கோவில் கோபுரங்களில் மண் கலசங்கள்தான் வைக்கப்பட்டு இருந்தன. இன்று அவைகளில் செப்புக் கலசங்கள் பொருத்தப்பட்டு இருக்கின்றன. சுவாமி கோபுரத்தில் உள்ள கோபுர கலசங்களை அமைத்துக் கொடுத்தவர் தூத்துக்குடி திரு. கே. எஸ். பி. எஸ். சண்முகவேல் நாடார் அவர்கள். அம்மன் கோபுர கலசங்களை அமைத்துத் தந்தவர் தினத்தந்தி, மாலைமுரசு நிர்வாகி திரு. பா. சிவந்தி ஆதித்தன் அவர்கள்.

திருக்கோவிலின் உள்ளே குடிகொண்டு இருப்பவர் ஆறுமுக நயினார். இந்தக் கோவிலின் திருப்பணிக்கு 10 ஆயிரம் ரூபாய் மதிப்பிடப்பட்டது. அதன் திருப்பணி வேலைகள் அனைத்துக்கும் பொறுப்பு ஏற்றுக் கொண்டார், முருகனையே துணைவனாகக் கொண்டு உள்ள பட அதிபர் திரு. சின்னப்பா தேவர் அவர்கள். அம்மன் சந்நிதியில் பளிங்குக் கற்களை அமைத்துத் தந்தவர் திரு. சங்கரலிங்க நாடார் அவர்கள்.

இந்தியா சிமிண்டு நிர்வாகி திரு. கே. எஸ். எஸ். ராமன் அவர்கள் அளித்த உதவியும் மறக்க முடியாது. அம்மன் சந்நிதியின் அர்த்த மண்டபத்தின் உயரே பிரம்மாண்டமான கல் உத்திரங்களைப் பொருத்தி இருக்கிறோம். அவைகள் ரோட்டில் கிடந்த போதே இதை எப்படி கோவிலுக்குள் கொண்டு போவார்கள்? உயரே எப்படி பொருத்துவார்கள்? என்று மூக்கின் மேல் விரலை வைத்தார்கள் பார்த்தவர்கள் அனைவரும். அப்படிப்பட்ட கல் உத்திரங்களைப் பொருத்துவதற்கு நவீன எந்திரங்களையும், நிபுணர்களையும் அனுப்பி உதவி செய்தவர் அவர்.

திருக்குட நீராட்டு விழா நாளில் வர்த்தகர் பலர் மகமை, காசுக் கடை மகமை, பாத்திர வியாபாரிகள் மகமை ஆகியவற்றின் சார்பில், ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கி வயிறு குளிரச் செய்தார்கள்.

**ஆதீனங்கள் நன்கொடை :**

திருப்பணியில் ஆதீனங்களும் பங்குகொண்டு உள்ளன. திருவாவடுதுறை ஆதீனம் ரூ. 15 ஆயிரம், தருமபுரம் ஆதீனம் ரூபாய் 25 ஆயிரம், மதுரை ஆதீனம் ரூ. 10 ஆயிரம் ஆகியவை வழங்கி உள்ளன.

கோயில் சுற்றுப் பிராகாரத்தில் கல் பதிக்கப்பட்டு இருந்தன. இதனால் பக்தர்கள் மேடு பள்ளங்களில் தடுமாற நேரிட்டது. இந்தத் திருப்பணியின் போது அந்தக் குறையை நீக்கி விட்டோம். கல்லுக்கு மேலே இப்போது சிமிண்டு தளம் அமைத்து இருக்கிறோம். இதன் மூலம் பிரகாரத் தரை சமதளம்ஆகிறது. பக்தர்கள் நடப்பதில் சிரமம் இராது.

ஜவுளிக் கடை மகமை குடமுழுக்கு விழாவுக்கு ஜவுளி வழங்கியுள்ளார்கள். பாத்திரக் கடை வியாபாரிகள் சங்கத்தார், அம்மன் கோவிலில் பித்தளைக் கதவு பொருத்தியிருக்கிறார்கள். கோபுரத்தின் மேல் தளத்தில் விரைவில் ஓடு



போட இருக்கிறோம். கேரளத்தில் ஒடு தயாரிக்கும் தொழிற்சாலையில் வேலை நிறுத்தம் நடப்பதால் இப்போதுஅதில் தாமதம் ஏற்பட்டு உள்ளது. விரைவில் அது நிறைவேற்றப்படும்.

கோவில் கோபுர வேலைப்பாடுகள் அருமையாகத்தான் இருக்கிறது. கோபுரத்திற்குக் கலர் கொடுத்து இருந்தால் இன்னும் சிறப்பாக இருந்து இருக்குமே என்று சிலர் சொல்வதாகக் கேள்வி. கலர் கொடுப்பதிலே நிறையச் சிரமம் உண்டு. அந்தக் கலர்களில் கவர்ச்சி இருக்குமே தவிர அது நீண்ட நாள் நிலைப்பது இல்லை. வெயிலில் காய்ந்து மழையில் உதிர்ந்து விடும். கலர்களும் ஒன்றுடன் ஒன்று கலந்து பார்வை குறைந்து விடும். ஆகவே அந்தத் திட்டத்தை நாங்கள் செயல்படுத்தவில்லை.

அரசாங்கத்தினரும் மற்றவர்களும் எங்களிடம் பெரிய பொறுப்பை ஒப்படைத்தார்கள். அன்று குற்றம் குறை சொன்னவர்களே பாராட்டும் அளவுக்குப் பொறுப்பை நிறைவேற்றி இருக்கிறோம் என்று எண்ணும்போது எனக்குள்ளேயே ஒரு பூரிப்பு, இனம் புரியாத ஒரு மகிழ்ச்சி. இத்தனைக்கும் காரணம் அண்ணாவின் பொறுமையையும், கலைஞரின் விறுவிறுப்பையும் மனத்தில் கொண்டு நான் பணியாற்றியதுதான். இன்றைக்கும் எனது மானசீக குருவாக நான் அவர்களையே கருதுகிறேன்.

குடமுழுக்கு விழாவின்போது பேருதவி அளித்த நகரசபைத் தலைவர் சூரியநாராயணன், நகர சபை ஆணையர் திரு. தங்கவேல், அவ்வப்போது ஆலோசனைகள் வழங்கிய நகர சபைப் பொறியாளர் திரு. சுந்தரவரதன், மற்றும் நகர சபை ஊழியர்கள், நகர சுத்தித் தொழிலாளர்கள் ஆகியோரின் ஒத்துழைப்பு எனக்கு இருந்ததை என்றென்றும் மறக்க இயலாது. உடன் இருந்து உற்சாகம் அளித்த அறங்காவலர்கள், திருப்பணிக் குழு உறுப்பினரான என் உடன் பிறவா அண்ணன் அலங்கார் இண்டஸ்ட்ரீஸ் அதிபர் திரு. ஆ. கந்தசாமி, மற்றும் திருப்பணிக் குழு உறுப்பினர்களான ஏ.எம்.கே. முத்தையா பிள்ளை, கவிஞர். மு.சு. சங்கர், வே. கணேச சண்முகசுந்தரம், கோவில் நிர்வாக அதிகாரி வி.டி.ஏ. சேவுகபாண்டியன், மற்றும் கோவில் ஊழியர்கள், நான் உற்சர்கம் குறைந்த நேரத்தில் எல்லாம் எனக்கு ஊக்கம் அளித்த திருச்செந்தூர்க் கோவில் நிர்வாக அதிகாரி திரு. வேலுச்சாமி, மற்றும் சர்வ கட்சி அன்பர்கள், சிவாச்சாரியர்கள், இராசகோபுர வேலையை அழகுற முடித்த தஞ்சை ஸ்தபதி திரு. சிவப்பிரகாசம், விமானங்களின் வேலைகளை முடித்த மதுரை ஸ்தபதி திரு. அசோகன், பொறியாளர் கேசவன், மற்றும் சோமசுந்தர வேளாளர் ஆகியோரின் ஒத்துழைப்பினுல்தான் இவ்வளவு குறுகிய நாளில் வேலைகள் முடிவடைந்தன. அவர்களுக்கு எல்லாம் இந்தச் சந்தர்ப்பத்தில் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வானொலி நிலையத்தார் குடமுழுக்கு விழாவினை நேர்முக வர்ணனை செய்தார்கள். அவர்களுக்கும் நன்றி கூறிக் கொள்கிறேன். பத்திரிகையாளர்கள், நிருபர்கள், பாதுகாப்பு ஏற்பாடுகளை அல்லும் பகலும் கவனித்த போலீஸ் அதிகாரிகள் ஆகியோரின் சேவைகளும் பாராட்டுக்குரியவை. *

# மதிப்புரை

(1) வள்ளலார் வாழ்வும் வாக்கும்: வடலூர் வள்ளற் பெருமானின் சமரச சன்மார்க்கக் கொள்கைகளை மக்களிடையே பரப்புவதை முழு நோக்கமாகக் கொண்டு, தொண்டாற்றி வரும் இராமலிங்கர் பணி மன்றத்தின் சார்பில், வள்ளலாரின் சித்தி நூற்றுண்டு விழாவினை ஒட்டி, 'சன்மார்க்கச் சான்றோர்' திரு நா. மகாலிங்கம் அவர்களால் இந் நூல் வெளியிடப் பெற்றுள்ளது. முன்பே சான்றோர் வரலாறுகள் பலவற்றை எழுதி யுதவியுள்ள சிறந்த பழம் பெரும் எழுத்தாளராகிய திரு அ.லெ. நடராஜன் அவர்களால், இந் நூல் எழுதப்பெற்றுள்ளது. வள்ளலார் வாழ்க்கையையும், அவர் பரப்ப விரும்பிய சமரச சன்மார்க்கக் கொள்கைகளையும், எளிய இனிய நல்ல தமிழ் நடையில்இந் நூல் அழகுற விவரிக்கின்றது. அன்பர்கள் படித்துப் பயன் பெறுவதற்குரிய சிறந்த நூல். விலை ரூபா ஐந்து. கிடைக்குமிடம்: இராமலிங்கர்பணி மன்றம், 6, போயஸ் தோட்டம், சென்னை-86.

(2) வள்ளலார் கண்ட ஒருமை வாழ்வு: இந் நூல் தவத்திரு. சுவாமி சரவணனந்தா அவர்களால் எழுதப் பெற்றது. இராமலிங்கர் பணி மன்றத்தின் சார்பில், 'சன் மார்க்கச் சான்றோர்' திரு. நா. மகாலிங்கம் அவர்களின் முன்னுரையுடன் வெளியிடப் பெற்றது. தவத்திரு சுவாமி சரவணனந்தா அவர்கள், புகழ்மிக்க சிறந்த பெருங் கவிஞர்! இராமலிங்கரின் சமரச சன்மார்க்க நெறியில் பெரிதும் ஈடுபட்டவர்! இராமலிங்கரின் அருட்பெருஞ்சோதி அகவலுக்குச் சிறந்த நல்ல விளக்கவுரை எழுதியிருப்பவர். இராமலிங்கரின் வரலாறு, சீவகாருண்ய ஒழுக்கம், ஒருமை வாழ்வு என்னும் மூன்று பகுதிகளில், பல்வேறு சிறந்த தலைப்புகளில் எளிய இனியநல்ல தமிழில் இந் நூல் இயன்றுள்ளது. அன்பர்கள் படித்துப் பயன் பெறுதற்குரிய சிறந்த நூல். விலை ரூபா மூன்று. கிடைக்குமிடம்: இராமலிங்கர் பணி மன்றம், 6, போயஸ்தோட்டம், சென்னை-86.

(3) பெரிய புராண ஆய்வுரை: (இரண்டாம் தொகுதி): தமிழ்க் கடல்—சைவ சித்தாந்தச் சான்றோர்—சிவத் திரு. மறை மலை அடிகளார் அவர்களின் புதல்வர், 'சித்தாந்த தினகரன்' பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு அவர்கள் எழுதியது இந் நூல். முதல் தொகுதியில் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாற்றினைச் சிறப்பாக ஆராய்ந்து எழுதிய மறை. திருநாவுக்கரசு அவர்கள், இவ்விரண்டாம் தொகுதியில் திருநாவுக்கரசரின் வரலாற்றினை நன்கு இனிது ஆராய்ந்து எழுதி யுதவியிருக்கின்றூர்கள். பெரிய புராணத்தை முழுவதும் தழுவிச் செல்லும் வரலாறு—அதற்குரிய அகச் சான்றுகள் — இடையிடையே தேவாரப் பாடல்களின் பொருள் விளக்கம்—ஐயப்பாடுகளுக்குத் தெளிவு நல்கும் தடை விடைகள் முதலிய பல சிறப்புக் கூறுகளுடன், இந் நூல் செவ்விதின் அமைந்துள்ளது. நல்ல இனிய பயன்மிக்க நூல். விலை ரூபா பத்து. கிடைக்குமிடம்: மறை மலையடிகள் மன்றம், புன்செய்ப் புளியம் பட்டி, (வழி) ஈரோடு, கோவை மாவட்டம்.

(4) முருகன் உறைவிடங்கள்: தமிழ்க் கடவுளாகிய முருகன் எழுந்தருளி விளங்கும் தலங்கள் பலவற்றைப் பற்றிய செய்திகளையும், வரலாறுகளையும் தொகுத்துத் தருவது இந் நூல். இதனைச் 'செந்தமிழ் வித்தகர்' திரு புலவர் வி. முத்துப்பிள்ளை அவர்கள் எழுதியுள்ளார்கள். முருகன் அடியார்கள் படித்து மகிழ்தற்குரிய நல்ல நூல். விலை ரூபா. நான்கு. கிடைக்குமிடம்: தணிகைப் பதிப்பகம், 138-ஏ, பவழக்காரத் தெரு, மண்ணடி, சென்னை—1.

(5) கந்தர் சஷ்டி விழா மலர்: சென்னை மண்ணடி கிருஷ்ணன் கோவில் தெருவில் உள்ள நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்கள் சங்கத்தின் சார்பில், ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டுவரும் கந்தர் சஷ்டி விழாவின் சார்பில், நான்காம் ஆண்டு மலர், அதன் செயலாளர் திரு. அன்புமணி அவர்களால் சிறப்பாகத் தொகுத்து, அழகாக வெளியிடப்பெற்றுள்ளது. முருகனைப் பற்றிய துதிப்பாடல்களும், கட்டுரைகளும், கவிதைகளும், தமிழ் அருச்சனைப் போற்றித் தொடர்களும், பிறவும் இதன்கண் இடம் பெற்றுள்ளன.

(6) ஆனந்த அலை: வடமொழியிற் சங்கரர் இயற்றிய சிவானந்த லகரி என்னும் துதி நூல், ஆனந்த அலை என்னும் பெயரால், அழகிய கவிதைகளாகத் தமிழாக்கம் செய்யப்பெற்றுள்ளன. இதனைச் செய்தவர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் பெயரர், கவிதாரத்தினம் வித்துவான் திரு. சு. உமைதாணு பிள்ளை அவர்கள் ஆவார். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் உறவும் பயிற்சியும் வாழ்த்தும் பெற்றுச்சிறந்த கவித்திறன் அமைந்த இவ்வாசிரியரின் பாடல்கள், நல்ல சொற்சுவை பொருட்சுவைகள் வாய்ந்து எழில் மிக்கு விளங்குகின்றன. பெரியோர்கள் பலர் இந்நூலுக்குச் சிறப்புரைகள் வழங்கியுள்ளனர். அரிய நல்ல தமிழ்க் கவிதை நூல். நல்ல அழகிய முறையிற் பதிக்கப் பெற்றுள்ளது. விலை குறிக்கப் பெறவில்லை. கிடைக்குமிடம்: திரு. சு. உமைதாணு பிள்ளை, கவிமணி இல்லம், தேரூர் (அஞ்சல்), சுசீந்திரம், கன்னியாகுமரி மாவட்டம்.

(7) குருஞான சம்பந்தர் வாரவழிபாட்டுக்கழகம், ஆண்டுவிழா மலர் இச் சிறப்பு மலர், சான்றோர் பெருமக்கள் பலரின் வாழ்த்துச் செய்திகள், கட்டுரைகள், கவிதைகள், அறிக்கைகள், பல பயன்மிக்க செய்தித் தொகுப்புகள் ஆகியவை அடங்கியது. விலை ரூபா மூன்று. பதிவு அஞ்சலில் பெற ரூபா நான்கு. கிடைக்குமிடம்: திரு. சி. கோவிந்தராசுலு, குருஞானசம்பந்தர் வார வழிபாட்டுக் கழகம், குத்தாலம், தஞ்சை மாவட்டம்.

—ஆசிரியர்

# மதுரைத் தல மாண்பு

**முன்னுரை :**

மதுரை ஒரு சிறந்த மாநகரம் மட்டுமேயன்று. அஃது ஒரு சிறந்த தலமும் ஆகும். தேவாரப் பாடல் பெற்ற சிறப்புடைய தலங்கள் 274. அவற்றுள் பாண்டிய நாட்டுத் தலங்கள் பதினன்கு என்பர். அவைகள், திருவாலவாய் (மதுரை), திருப்புனவாயில், திருக்குற்ருலம், திருவாப்பனூர், திருஏடகம், திருநெல்வேலி, திருஇராமேசுவரம், திருஆடானை, திருப்பரங்குன்றம், திருச்சுழியல், திருப்புத்தூர், திருக்கானப்பேர் (காளையார் கோவில்), திருப்பூவணம் என்பனவாகும். இப்பதினன்கு பாண்டிய நாட்டுத் தலங்களுள், முதன்மை மிக்க தலம் மதுரையே ஆகும். மதுரையின் சிறப்புகட்கெல்லாம் அதன்கண் அமைந்துள்ள கோயிலே காரணம்.

கோயில் அமைந்துள்ள இடமெல்லாம் சிறப்புடையனவே யாயினும், ஒரு கோயில் பெரிதும் சிறந்ததெனப் போற்றப்படுவதற்கு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூவகைச் சிறப்புக்களும் அங்கு அமையப் பெற்றிருத்தல் வேண்டும். மதுரைக் கோயிலுக்கு இம்மூவகைச் சிறப்புக்களும் அமைந்திருத்தல் மகிழ்தற்குரியது.

**திரு ஆலவாய் :**

திருவாலவாய் என்னும் மதுரைக்கு இணையான ஒரு தலமும், அங்குள்ள பொற்ருமரைக் குளம் போன்ற ஒரு தீர்த்தமும், அத் தீர்த்தத்தின் மருங்கே ஞான வடிவம் ஆக விளங்கித் தன்னை வழிபடும் அடியவர்களுக்கு இகமும் பரமும் வீடும் தருபவர் ஆகிய சோமசுந்தரப் பெருமான் போன்ற ஒரு மூர்த்தியும், மூன்று உலகங்களிலும் இல்லை என்பது திண்ணம்.

''திருவால வாய்க்கிணையாம் ஒரு தலமும்,
தெய்வமணம் செய்யப் பூத்த
மருவார்பொற் கமலநிகர் தீர்த்தமும், அத்
தீர்த்தத்தின் மருங்கே ஞான
உருவாகி யுறைசோம சுந்தரன்போல்
இகபரந்தந் துலவா வீடு
தருவானும், முப்புவனத் தினும்இல்லை!
உண்மைஇது சாற்றின் மன்னே!''

**தலச் சிறப்பு :**

எல்லா உலகங்களிலும் தரும தலம் சிறப்புடையது. அதனிலும் சைவத் தலம் சிறப்பு உடையது; அச் சைவ தலங்களுள் 68 தலங்கள் சிறந்தவை ; அவற்றிற்குள் 16 தலங்கள் சிறப்பு வாய்ந்தவை ; அவற்றில் சிதம்பரம், காசி, திருக்காளத்தி, திருவாலவாய் என்னும் நான்கு தலங்கள் மிகச் சிறப்புடையன; இவற்றிலும் திருவாலவாய் என்னும் மதுரையே மிகவும் தலை சிறந்தது.

ஏனெனில், சிதம்பரம் கண்டு தரிசித்தாலும், காசி சென்று வாழ்ந்து இறந்தாலும், திருக்காளத்தி பக்தியினல் வழிபட்டாலுமே, இவ்வுலக போகமும் வீட்டுலக இன்பமும் தரும் இயல்புடையன. ஆனல் திருவாலவாயோ, தன் பெயர் கேட்ட மாத்திரத்திலேயே போகம் அளிக்கும் ; மீண்டும் பிறந்திறவாப் பேரின்பக் கதியளிக்கும்! மேலும்,

''திருவால வாய்என்று கேட்டவரே
அறம் பெறுவர்! செல்வம் ஓங்கும்
திருவால வாய்என்று நினைத்தவரே
பொருள் அடைவர்! தேவ தேவைத்
திருவால வாய்இடத்துக் கண்டவரே
இன்பநலம் சேர்வர்! என்றும்
திருவால வாய்இடத்து வதிந்தவரே
வீட்டுநெறி சேர்வர்! நன்றே''

கங்கையாற்றின் கரையிலுள்ள காசி முதலிய தலங்கள் மறுமையிலேயே வீடுபேறு அளிக்கும் ; ஆனல் வைகையாற்றின் கரையிலுள்ள மதுரையோ, உலகில் வாழ்ந்து கொண்டு இருக்கும்போதே வீடுபேறு (சீவன் முத்தி) தரும். ஆதலின் மதுரைக்குச் சீவன்முத்திபுரம் என்றும் ஒரு பெயர் உண்டு. ஆதலின் இந்தத் தலத்தை விட்டு வேறு பிற தலங்களுக்குச் சென்று தவமும் வழிபாடும் செய்யத் தலைப்படுபவர்கள், சீதளவான் அமிழ்தம் போல் தித்திக்கத் தேன் பெய்து செய்த தீம் பாற்சோறு கையில் இருப்ப, அதனை விட்டுப் புறங்கையைச் சுவைப்பவர்களுக்குச் சமமாவர்.

மற்றைய தலங்களிற் பரிமகம், வாசபேயம், சோடசாகம், அக்கினிட்டோமம், இராசசூயம் முதலிய யாகங்களும், தரிசபூர்ணம் முதலிய கிரியைகளும் செய்த நல்வினைப் பேற்றையும், கங்கை, யமுனை, சரசுவதி, கோதாவரி, கிருஷ்ணு, துங்கபத்திரை, பாலாறு, காவிரி, பொருநை முதலிய நதிகள் பலவற்றிலும் முழுகி வழிபட்ட நல்வினைப் பயனையும், மதுரையில் வாழ்பவர்கள் நாடோறும் பெறுவார்கள்.

**தீர்த்தச் சிறப்பு :**

மதுரையிலுள்ள தீர்த்தம் பொற்ருமரைத் தீர்த்தம் எனப்படும். இது, கங்கை காவிரி முதலிய நதிகளும், கடல்களும், மேகங்களும் படைக்கப்படுவதற்கு முன்னரே, சிவபெருமான் தன்னை வழிபடுவோர் திருவபிஷேகம் செய்தற் பொருட்டு முதன் முதலிற் படைத்ததாகும்.

எல்லாத் தீர்த்தங்களுக்கும் முதலில் தோன்றியதால் ஆதி தீர்த்தம் என்றும்; பிற தீர்த்தங்கள் எல்லாவற்றையும் விட மிக மேலான தீர்த்தம் ஆதலின் பரம தீர்த்தம்

என்றும்; தன்பால் மூழ்கி வழிபடுபவர்களுக்கு அருளையும் மங்கலத்தையும் விளைவித்தலால் அருட்சிவ தீர்த்தம் என்றும்; நமது அஞ்ஞானத்தை அகற்றி ஞானத்தை அளித்தலால் ஞான தீர்த்தம் என்றும்; முத்தியின்பம் பெறுமாறு செய்வித்தலால் முத்தி தீர்த்தம் என்றும் பல பெயர்கள், இதற்கு வழங்கும்.

மேலும் உலகிலுள்ள தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் உத்தமமானதாக ஒளிர் தலின்உத்தம தீர்த்தம் ; பல இதழ்களை விரித்துச் செந்தாமரை மலர் பூத்துப் பொலிவுற்று விளங்கும் தன்மையினுல் பொற்ருமரைத் தீர்த்தம் ; தன்பால் முழுகி நீராடி வழிபடும் உண்மை அடியார்களுக்கு எல்லாம் தருமம், அருத்தம், காமம், மோட்சம் என்னும் நான்கு உறுதிப் பொருள்களையும் தருதலால் தரும தீர்த்தம், அருத்த தீர்த்தம், காம தீர்த்தம், மோட்ச தீர்த்தம் என்றும் நூல்கள் இதனைப் புகழ்ந்து கூறும்.

''அலகிலாத் தீர்த்தம் தம்முள்
அதிகஉத் தமமாய்த் தோன்றி
இலகலால் இதனைத் தீர்த்த
உத்தமம் என்பர் ஆய்ந்தோர்!
பலஇதழ் விரித்துச் செம்பொற்
பங்கயம் மலர்ந்த நீரால்
உலகவர் யாரும் பொற்ரு
மரைஎன உரைப்பர் அன்றே''

பிற தலங்களுக்குச் சென்று, அங்கிருந்து செய்கின்ற விரதம் பூசை தானம் தருமம் ஓமம் தவம் செபம் தியானம் முதலியவற்ருற் பெறும் பயனைக் காட்டிலும், பொற்ருமரைத் தீர்த்தத்தை அடைந்து நீராடி, அதன் கரையில் இருந்து அவற்றைச் செய்தால், கோடி மடங்கு மிகுதியான பயனைப் பெறலாம்.

''ஏனமா தலங்கள் தம்மில்
இருந்துசெய் விரதம் பூசை
தானமா தருமம் ஓமம்
தவம்செபம் தியானம் தம்மால்
ஆனமா பயனிற் கோடி
அதிகமாம்; அடைந்து மூழ்கி
ஞானமா தீர்த்த ஞாங்கர்
இருந்தவை நயந்து செய்யின்''

**மூர்த்திச் சிறப்பு :**

மதுரைத் தலத்தில் உள்ள அருட் குறியாகிய சிவலிங்கம், மேருமலை வெள்ளி மலை மந்தர மலை திருக்கேதாரம் வாரணவாசி முதலிய எண்ணில்லாத் தலங்கள் எல்லாவற்றிலுமுள்ள இலிங்கங்கள் எல்லாவற்றிற்கும், முன்னே தோன்றிக் கடம்ப மரத்தின் அடியில் முளைத்ததாகும். பிற தலங்களின் இலிங்கங்கள் எல்லாம் இதனில் இருந்தே பிறகு தோன்றுவன ஆயின. ஆதலின் இதற்கு மூலலிங்கம் என்பது பெயர். 'முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி' என்னும் திருநாவுக்கரசர் திருத்தாண்டகம் இக்கருத்தினையே வலியுறுத்துகின்றது.

பிற தலங்களில் உள்ள இலிங்கங்கள் எல்லாம் தனித் தனி ஒன்ருன அமைப்புடைய வியட்டி லிங்கம் ; மதுரையிலுள்ளதோ, எல்லாம் ஒருங்கு திரண்டு தொகுதியானஅமைப்பும் ஆற்றலுமுடைய சமட்டிலிங்கம் எனப்படும். எனவே மதுரையிலுள்ள இலிங்க மூர்த்தத்தினைக் கண்டு வழிபடப் பெற்ருல், வேருக்கு ஊற்றும் நீரானது மரத்தையும் அதனுடைய பல வேறு எண்ணற்ற கிளைகளையும் வளர்த்துச் செழிப்படைவித்தல் போல, ஏனைய எல்லாத் தலங்களிலும் உள்ள இலிங்கங்களையும் தனித் தனியே கண்டு வழிபடப் பெற்ற சிவ புண்ணியம் கிடைக்கும் என்பது திண்ணம்.

''சொற்றஇச் சமட்டி யான
சோமசுந் தரனைக் காணப்
பெற்றவர், வியட்டி யான
பிறபதி இலிங்கங் காணல்
உற்றவர் ஆவர்! என்னென்
றுரைக்கின், வேர் ஊட்டும் நீர்போய்
மற்றைய சினைகள் எல்லாம்
தழைவிக்கும் மரத்தின் மாதோ''

மலைகளில் மேருமலையும், மரங்களிற் கற்பக மரமும், யாகங்களில் அசுவமேத யாகமும், தானங்களில் அன்னதானமும், மனிதர்களில் நல்ல மறை வல்லவர்களும், விரதங்களிற் சோம வார விரதமும், மந்திரங்களில் திருவைந்தெழுத்து மந்திரமும், மணிகளிற் சிந்தாமணியும், தருமங்களிற் சிவ தருமமும், பசுக்களிற் காமதேனுவும், தீர்த்தங்களிற் பொற்ருமரைத் தீர்த்தமும் சிறந்து விளங்குதல் போல, ஏனைய எல்லாத் தேவர்களிலும் தலைசிறந்து திகழ்பவன் சோமசுந்தரப் பெருமான் ஒருவனே யாவன்.

மதுரையிலுள்ள, சோமசுந்தரக் கடவுள் தம்மை வழிபடும் அடியார்களின் பாவங்களையெல்லாம் போக்கி, நலங்களெல்லாம் விளைத்துக் காத்தாட் கொள்ளும் பரம கருணையுடையவர். அவரை வணங்குதலால் நம்மனோர் பாவங்களெல்லாம் நீங்குதல் திண்ணம். சோமசுந்தரப் பெருமானை வழிபடுதலால் தீப்பொறி பட்ட பஞ்சுப் பொதி எரிந்து போவது போலவும், கோபம் உண்டாவதனுல் தவ ஆற்றல்களெல்லாம் சிதைந்தொழிவது போலவும், மருந்தின் வலிமையால் நோய்கள் தீர்வது போலவும், உத்தம குணங்களெல்லாம் உலோப குணத்தால் அழிந்து இழிவுறுவது போலவும், ஞாயிறு தோன்றுதலால் இருள் கெட்டு ஓடி ஒளிவது போலவும், வலிய சூருவளி வீசுதலால் மேகங்கள் பலவேறு திசைகளில் சிதறுண்டு போவது போலவும், சிங்கமானது சீறிப் பாய்தலால் யானை இறந்து படுவது போலவும், தேவேந்திரனின் குலிசாயுதத்தால் பெரிய பெரிய மலைகள் எல்லாம் பொடிப் பொடியாக வீழ்ந்து சிதறியது போலவும், கொடிய காம உணர்ச்சியால் நல்ல அறிவு கெடுவது போலவும், அருட்சிவ ஞான நோக்கால் அஞ்ஞானம் தவிர்வது போலவும், செருக்கு மிகுதியினுற் சிறந்த கல்வி நலம் சிதைதல் போலவும், எல்லாப் பாவங்களும் நீங்கி நலங்களெல்லாம் வந்து அடையும்.

**முடிவுரை :**

இவ்வாறு மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்று பெருஞ் சிறப்புக்களும் அமைந்ததும், சிவபெருமான் 64 திருவிளையாடல்களை நிகழ்த்தியருளிய ஒப்புயர்வற்ற சீர்த்தியுடையதும் மதுரைத் தலம் எனின், அதன் அருமை பெருமைகளை நாம் அளவிட்டுரைத்தல் இயலுமோ? *



# சிவநெறி பேணிய செல்வப் பல்லவன்

பேராசிரியர் ஔவை. சு. துரைசாமி

ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன் தொண்டை நாடு பல்லவரது ஆட்சியில் இருந்தது. சங்க காலத்துக்குப்பின் தமிழ்நாட்டிற்குட் புகுந்து அரசு நிலையிட்டு நெடுங்காலம் ஆட்சி புரிந்தவர் பல்லவர்கள். அவர்கட்குப் பின்பு தோன்றிய சோழர்களோ, பாண்டியர்களோ, விசயநகர வேந்தர்களோ. முகமதியரோ, ஐரோப்பியரோ எவரும் பல்லவர் போலத் தமிழகத்தில் தொடர்ந்து நெடுங்காலம் ஆட்சி புரிந்தது இல்லை. சுமார் ஐந்நூறு ஆண்டுகள் பல்லவர் அரசு புரிந்தனர் என இதுவரை வெளியாகியிருக்கும் வரலாற்றுச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

இப் பல்லவர்களின் செப்பேடுகளையும் கல்வெட்டுக்களையும், பெயர்களையும் நோக்கும்போது இவர்கள் தமிழரல்லர் என்பது திட்டமாகத் தெரிகிறது. நாட்டவர் தமிழ் மக்களாயிருந்தமையின் பல்லவ அரசு தமிழில் நடைபெற்றதேயன்றி, அவரது ஆதரவு பெற்றது தமிழல்லாத வடமொழியே; அவர்கள் விரும்பிக் கல்லூரி நிறுவிப் பேணியது வடமொழியையேயாகும்.

பல்லவ வேந்தரும் நன்கு பயின்றிருந்தது வடமொழியேயாதலால் அவரது அவைக்களத்தில் அவரைச் சூழ்ந்திருந்தவர் வடமொழியாளராவர். அவர்கள் தமிழ் நாட்டில் உயரிய வாழ்வு பெற்று இனிது இருக்க வேண்டி வளமிக்க ஊர்களைப் பிரமதேயம் என்றும், சதுர்வேதி மங்கலம் என்றும் பல்லவ வேந்தர் வழங்கினர். தமிழ்ப் பேரறிஞர்களையோ தமிழ் மன்றங்களையோ இவ்வாறு ஆதரித்ததாக ஒரு குறிப்பும் இன்று வரையில் கிடைக்காமையால், பல்லவர்களைத் தமிழ் நாட்டுத் தொல்குடிகள் என்று நினைத்தற்கு இடமே ஏற்படவில்லை.

இனி, பல்லவர்கள் தமிழ் நாட்டில் புகுதற்கு முன் வட புலத்தில் நாடோடிகளாய் வாழ்ந்தனர். சங்க காலத்தில் வடுகர் எனவும் மோரியர்எனவும் ஓவியர் எனவும் பலர் தமிழகத்திற்கு வந்தனர்; அவர்கட்குப் பின் களப்பிரர் என்பவரும் அவரோடு பல்லவரும் வந்தார்கள். அவர்களில் களப்பிரர் மேற்கு மலைத் தொடரின் அடிப் பகுதியிற் படர்ந்து நாளடைவிற் பாண்டி நாடு புகுந்து அரசைக் கைப்பற்றினர். பல்லவர் வடுகர் கருநாடர் முதலியோரைத் தம்முள் தழுவிக் கொண்டு, தமிழகத்தின் வட பகுதியான தொண்டை நாட்டைக் கைப்பற்றி அரசு நிலையிட்டனர். தொண்டை நாட்டுக் கீழைக் கடற்கரைப் பகுதி கடலுள் மூழ்கினமையாலும், நாட்டினுள் வேற்றவர் குடி புகுந்து பரவினமையாலும் தொண்டை நாட்டு வேந்தரான தொண்டையர் வலி குன்றியிருந்தனர்; அது, பல்லவர் நிலைபெற்று அரசைக் கைப்பற்றுவதற்கு நல்ல வாய்ப்பை உண்டு பண்ணிற்று. தொண்டையரின் கடற்கரை நகரமான பவத்திரி கடற்கு இரையாயினமையின், காஞ்சி நகரமே பல்லவர் ஆட்சிக்கும் தலைமையிடமாயிற்று. பவத்திரி தொண்டை நாட்டின் கடற்கரை நாடு என்பதைச் சங்க இலக்கியமும் (அகம் :340), அது கடல் கொள்ளப்பட்டதை நெல்லூர் மாவட்டத்துக் கல்வெட்டுக்களும் (நெல். கல். கூடூர் ; 87; ஆண்டறிக்கை 530, 541/1908) கூறுகின்றன. பல்லவர்க்கெனத் தனி நாடு இல்லாமையால் பல்லவ நாடு என ஒரு நாடு வடபுலத்தில் இருந்ததாக வடமொழியில் ஒரு நூலும் குறிக்கவில்லை. மணிமேகலை என்ற தமிழ் நூல் குறிக்கும் மணிபல்லவம் என்ற தீவு உண்மையாயின், அது ஆந்திர மாவட்டக் கடற்கரையை ஒட்டியிருந்து பின்பு கடற்கு இரையாகி இருக்க வேண்டும். கரையிற்குடி புகுந்த பல்லவத் தீவினர் பல்லவரென்ற பெயருடன் வடவடுகரைத் தம்மொடு கூட்டிக்கொண்டு தொண்டை நாட்டிற் புகுந்திருப்பர். சீவக சிந்தாமணி என்ற கற்பனைக் காப்பியம் கூறும் பல்லவ நாடு வெறுங் கற்பனையேயன்றி உண்மையன்று.

காஞ்சி நகர்க்கண் இருந்து அரசு புரிந்த பழைய பல்லவருள் சிம்ம விஷ்ணு என்பவன் சிறப்புடையவன். அவனைச் சத்துருமல்லன், லலிதாங்குரன், அவனிபாசனன் எனப் பல பெயர்களால் வடமொழியாளர் புகழ்ந்துள்ளனர். (எஸ்.ஐ.ஐ.வால். 12 முன்.பக். 11) தனது அரசை நிறுவியபோது, களப்பிரர், மாளுவர், சோழர், பாண்டியர் முதலாயினருடன் அவன் அரும்போர் செய்துள்ளான் (எஸ். ஐ. ஐ.வால், 2 பகுதி4, பக். 510).

அந்நாளில் வாழ்ந்த வேதியர் பலர் வடமொழியில் வேதங்களைப் பயின்று சமுதாயத்தில் மேனிலைக் குடிகளாய், அரசனை மகிழ்வித்தபடியால், அவர்களது வாழ்வு செம்மை

குறையாமலிருக்க வேண்டித் திருவொற்றியூருக்கு அண்மையிலுள்ள மணலி என்னும் வளமான ஊரைச் சிம்மவிஷ்ணு சதுர்வேதி மங்கலமெனப் பெயரிட்டு அங்கே வாழ்ந்த பிராமணருக்குக் கொடுத்தான். தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் பகுதியில் இருக்கும் கஞ்சனூர், சிம்மவிஷ்ணு சதுர்வேதி மங்கலம் எனப்படுவது அவ்வேந்தனது செல்வாக்குச் சோழ நாட்டிலும் பரவியிருந்ததெனத் தெரிவிக்கின்றது. (ஆண்ட. 265/1907).

வடார்க்காடு மாவட்டத்துச் சீயமங்கலத்திற் காணப்படும் குகைக் கோயில் இப்பல்லவனுல் அமைக்கப்பட்டிருக்கலாம் என அறிஞர் துப்ராயில் முதலியோர் துணிகிருர்கள். சிங்கத்துக்குச் சீயம் என்பதும் ஒரு பெயராதலால், சீயமங்கலம் என்ற பெயரும் அக்கருத்துக்கு ஆதரவு தருகிறது. (Pallava Antiquities Vol. 1 பக். 40) மாபலிபுரத்திலுள்ள ஆதிவராகசாமி கோயிலில் உள்ள கற்படிவங்களில் ஒன்று சிம்மவிஷ்ணுவின் உருவச் சிலையாகலாம் எனச் சிலர் கருதுகின்றனர். இச் சிம்ம விஷ்ணு ''சிம்ம விஷ்ணு போத்தாதி ராசன்'' எனப் பெயர் பொறிக்கப்படுகிருன். செப்பேடுகள் ''பத்தி ஆராதிதவிஷ்ணு சிம்ம விஷ்ணு'' என்பது கொண்டு இவன் சிறந்த திருமால் வழிபாட்டினன் என அறிகிறோம். (Early History of Vaishnavism in South India, பக். 95).

சிம்ம விஷ்ணு போத்தராசனுக்குப் பின்பு காஞ்சி நகரத்துப் பல்லவ மன்னனுக விளங்கியவன் முதல் மகேந்திரவர்மன். இவன் சிம்மவிஷ்ணுவிற்கு எம்முறையினன் என்று இன்று வரை தெளிய முடியவில்லை; என்றுலும், பல்லவர் குடியின் பெருமையை நிலைநாட்டுவதில் மிக்க ஊக்கமுடையவன்.

இந் நாளில் வட பகுதியில் சளுக்க வேந்தரின் ஆட்சி ஓங்கியிருந்தது. அவ் வேந்தருள் இரண்டாம்புலிகேசி அரசு வீற்றிருக்கையில் வட புலத்திலிருந்து அருஷவர்த்தனன் என்ற மன்னன் பெரும் படையுடன் தென்னுட்டில் தன் புகழை நிறுவ விரும்பி வந்தான். எதிர் நின்ற சளுக்க வேந்தர் அவனேடு போருடற்றி அவனை ஈடழித்தார்கள். அவனும் திரும்பி வட புலம் போய்ச் சேர்ந்தான். அதனுல் அப்பகுதியில் அருஷனுக்கு அஞ்சித் துணை புரிந்த சிற்றரசர் பலர் வெற்றி கொண்ட புலிகேசிக்குத் திறைசெலுத்தும் குறுநில மன்னராயினர்.

அந்நிலையில் வேங்கி நாடு பல்லவராட்சியில் இருந்தது. வெற்றி வீறு கொண்ட புலிகேசி அந் நாட்டுட் புகுந்து வேங்கிநகரைக் கைப்பற்றி வெற்றித் தூண் ஒன்றை நிறுவினுன்; அதன்கண் தான் பல்லவரை வென்ற சிறப்பையும் பொறித்தான்; தன் தம்பி குப்த விஷ்ணு என்பவனை அங்கிருந்து ஆட்சி புரிவித்தான். அந்த அளவில் புலிகேசியால் அமைய முடியவில்லை. தொண்டை நாட்டிற் புகழ்நிறுவிப் பொலிந்த பல்லவராட்சியை வீழ்த்த விரும்பித் தமிழ் நாட்டிற் புகுந்தான்.

காஞ்சி நகர்க்கண் அரசு புரிந்த மகேந்திரனுல் அவனை முதற்கண் எதிர்க்க முடியவில்லை. தென்னுட்டிற் புகுந்து ஆங்காங்கே இருந்த தமிழ் நிலக் குறுவேந்தர் துணை செய்யப் பெரும் படை கொண்டு போந்து புலிகேசியுடன் மீளப் போர் தொடுத்தான். புள்ளலூர் என்னுமிடத்தே பல்லவர் படையும் சளுக்கர் படையும் நேர்பட்டுப் பொருதன. சளுக்கர் படை தவிடு பொடியாயிற்று. புலிகேசி எஞ்சிய படையுடன் புறந்தந்து ஓடி மீளத் தான் உயிரோடிருக்கும் வரையில் தென்னுட்டை நினையாதுயினன். மகேந்திரன் கருமுகிற் புடையில் கரந்திருந்த ஞாயிறு, அது நீங்கியதும் ஒளி மிகுந்தொளிர்வது போலக் காஞ்சி நகர்க்கண் இருந்து புகழ் பரப்பி வாழ்ந்தான்.

முதல் மகேந்திரன் வடமொழியில் நல்ல புலமை படைத்தவன். பொதுவாகப் பல்லவர் வடமொழியையே பெரிதும் போற்றுபவர்; வடமொழி வாணர்க்குச் செல்வ வாழ்வு தந்த சிறப்புடையவர். அக்காலத்தே தமிழகத்தில் சங்க காலத் தமிழ் வாழ்வு, வடவடுகர் வான் கருநாடர் களப்பிரர் முதலிய வேற்றவர் படர்ச்சியால் கலங்கி ஒளி மழுங்கிக் கிடந்தது. சிவ வழிபாடும் சைவத் திருநெறியும் செந்தமிழ்த் திறமும் சிறப்பிழந்தன; பழந் தமிழ்ச் சோழர் பரிசிழந்து மெலிந்தனர். பாண்டி நாடு களப்பிரர் செய்த கலக்கத்தால் கட்டுக் குலைந்து காவல் இழந்து கையறவுற்றது. வில்லும் வேலும் ஏந்திப் புகாவாறு பல்லவ வேந்தரது படை வேலி வடபுல மன்னரை மறித்துநின்றதாயினும், பௌத்தரும் சயினரும் பாசுபதரும் காபாலிகளும் சமயவொழுக்கினராய் வடமொழி வழங்கும் வாயினராய்த் தொண்டை நாடு புகுந்தனர். சோழ நாட்டில் திரிந்தனர்; பாண்டி நாட்டிலும் பரவினர். வல்லோசையும் மன்னர் ஆதரவும் பெற்று வடமொழி புதிராய்ப் புகுந்தோர் வாயிலும் கையிலும் மகிழ்ந்து உலவக் கண்டு அந்நாளைய தமிழர் அம் மொழிக்கும் அதன் வழக்குக்கும் முதன்மை தந்து தமிழின் இயல் இசை நாடகம் என்ற முக்கூற்றையும் கைந் நெகிழ்த்தனர். புதிது புகுந்த ஆங்கிலத்தைக் கண்டதும் தாய் மொழியையும் வடமொழியையும் புறக்கணித்த வராதலால், தமிழ் நாட்டவர் பல்லவர் காலத்தில் தமிழைக் கைவிட்டது வியப்புத் தருவதன்று. தாயிருக்கப் பேயைப் பரவிப் பாராட்டும் பேய்ப் பண்பு பன்னூறு ஆண்டுகட்கு முன்பே தமிழகத்தைப் பற்றிக் கொண்டது. இன்றும் தமிழல்லாத பிறயாது வரினும் விரைந்து வரவேற்றுப் போற்றும் கயவர் கூட்டம் ஒன்று, தமிழரிடையே புல்லுருவிபோல இருந்து கொண்டுதானே இருக்கின்றது?

தமிழை இழந்து தமிழ்ச் சைவ நெறியை இழந்து தறிதலைப்பட்டுக் கிடந்த தமிழரிடையே பவுத்தமும் சயினமும் புகுந்தன. ''மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்'' என்பது சங்க காலத் தமிழ்க் கொள்கை. ''மன்னன் எவ்வழி அவ்வழி மக்கள்'' என்பது தமிழ்ப் பழமொழி. அதனுல் வேற்றவர் பலரும் வேந்

தரை வளைத்துக்கொண்டு தமது சொல் வன்மை யாலும் தோற்ற ஒழுக்கத்தாலும் சமுதாயத்தில் தலையாய இடத்தைக் கைப்பற்றினர். தமது பழங் கொள்கைகளைக் கைவிட்டு இருந்த தமிழர், புதிது புகுந்த சமயங்களில் யாது எப்பகுதியில் சிறப்பும் செல்வாக்கும் பெற்ற தோ, அதனை, வரவேற்றுப் போற்றுவது அந் நாளைய வாழ்வுக்கு ஒத்த செயலாக எண்ணினர். அதனுல், தமிழர் பலர் பவுத்தரும் சயினரும் பாசுபதரும் காபாலியரும் மாவிரதியரும் காளாமுகருமாய் நாடு முற்றும் காட்சி தருவாரா யினர். அவர்கட்கு முன்னே புகுந்து சதுர் வேதிகளாய் காமிய கன்மமான வேள்விக் காமக்காணிகளாய் தலைமை நிலையில் வீற்றி ருந்த வேதிய வைதிகருக்கும் புத்த சயினருக்கும் இடையே சொற் போர்முழக்கம் ஆங்காங்கு எழுந்து கொண்டிருந்தது. சயினப் பள்ளிகளும் பவுத்த மடங்களும் சமயக் கல்வி வழங்கும் நிலையங்களாயின. சதுர்வேதி மங்கலங்கள் வேள்விப் புகை மண்டி வேதமோதும் கடிகை களும் கிடைகளுமாய் (கடிகை—வடமொழி பயிலும் கல்லூரி. கிடை—வேதம் பயிற்றுவிக் கும் கல்விக் கூடம்), வைதிக வாழ்வுக்கு அரண் செய்தன. தமிழ்ப் பயிற்சிக்குத்தான் அந் நாளில் ஒரு நிலையமும் இல்லாமல் இருந்தது.

நாட்டின் நிலையையும் நாட்டு மக்களின்மனப் பான்மையையும் கண்ட மன்னனுன மகேந்திர வன்மன் வடமொழிப் புலமையால் சயினரின் சமயக் கொள்கைகளை நயந்து தானும் சயினனுய் விளங்கினுன். தமிழ் நாட்டரசு எக்காலத்தும் சமயங்கள் தனி முறையில் மக்களிடையே வளமும் வளர்ச்சியும் பெறுதற்குத் தடை விதித் தது கிடையாது. ஒரு குடும்பத்தில் கணவன் ஒரு சமயத்தையும் மனைவி ஒரு சமயத்தையும் மேற்கொள்வதைத் தமிழ் வாழ்வு தவறென்று கண்டதில்லை.

முதல் மகேந்திரன் சயினனுக இருந்தானுயி னும் தன் குடைக்கீழ் வாழ்ந்த மக்களைச் சயின ராகுமாறு வற்புறுத்தும் கொடுமையை மேற் கொள்ளவில்லை. சமய வளர்ச்சி குறித்துக் கற்றவர்கள் நூல்கள் எழுதும் உரிமையும், சமயச் சொற் போர் புரியும் உரிமையும் கற்ற வரிடையே களிநடம் புரிந்தன. அதனுல், குடி காரன் செயலொன்றைப் பொருளாகக் கொண்டு ''மத்தவிலாசம்'' என்றெரு நாட கத்தைப் பல்லவ மன்னனுன முதல் மகேந்திரன் நகைச்சுவை பொங்கி வழிய எழுதினுன்; இதனை ஓர்அங்க நாடகம் என்ற பொருளில் 'பிரகச னம்' என வடமொழியிற் கூறுவர். அதனுல், வடமொழியினர் அதனை 'மத்தவிலாசப் பிரகச னம்' என வழங்குகின்றுர்கள்.

இந்த நாடகத்தில் பத்திய சோமன் என்னும் காபாலி யொருவன், கள்ளுண்டு மயங்கி வருகி முன். அவனேடு ஒரு பெண்ணும் வருகிறுள். களி மயக்குற்ற போது அவனது கபாலத்தை நாய் ஒன்று கவர்ந்து கொண்டு ஓடி மறைந்து விடுகிறது. அதனை அறியாமல் எதிரே வந்த சாக்கியன் (பவுத்தன்) ஒருவனைக் கண்டு அவனைத் தன் கபாலத்தைக் கன்றிய கள்வ னெனக் கருதிப் பூசலிடுகிறுன். இருவரும் நெறிவழுவிய பாசுபதன் ஒருவனைப் பார்த்துத் தமது வழக்கைக் கேட்டு முறை வழங்கு மாறு வேண்டுகிறுர்கள். முடிவில் பித்தன் ஒருவன் நாயிடமிருந்து கபாலத்தைக் கொண்டுவரக் கண்டு அதனைப் பெற்றுக் கொண்டு காபாலி போகின்றுன். இதுதான் மத்த விலாசத்தின் உள்ளுறை.

இந் நாடக நிகழ்ச்சியில் சில கருத்துக்கள் வெளியாகின்றன. வைதிக வேதியனுக்குப் பூணூல் போலக் காபாலிக சமயத்தவர்க்குக் கபாலம் சிறப்புத் தருவது. ஒரு கால், அது கெடுமாயின், சமய நூல் குறித்த கால எல்லைக்குள் வேறென்றைத் தேடிக் கொள்ள வேண்டும். மேலும் அவர்கள் மேனி முழுவதும் வெண்ணீறணிந்தவேடத்தேராய் இருக்க வேண் டும். பிறர் கண்டு விரும்பத் தகாத கோலத் தராவது நீறணிந்த காபாலியின் நோக்கமாகும். கள்ளுண்பது காபாலிகட்கு விலக்கன்று. கள் ளுண்ணும்போது அதனைக் காபாலத்திற் பெய்தே அருந்த வேண்டும். கபாலமேந்தும் காபாலி கையில் ஊது கொம்பு ஒன்றையும் ஏந்தியிருப்பன். வழிபாட்டின்போது முதற்கண் அக்கொம்பை வாய்வைத்து ஊதி ஏனைக் காபாலிகளை வருவிப்பன். அவர்கள் வரினும் வராவிடினும் அக்கொம்பை ஊதியே வழிபாடு தொடங்கும். தண்ணீர் பருகுவதற்கும் அக் கொம்பு அவற்குப் பயன்படும். பெண்ணேடு கூடி வாழ்வது காபாலிகட்கு அறமாகும். காரணப் பொருளின் பண்பு காரியத்துக்கும் உண்டென்னும் இயல்பை வற்புறுத்தி, இம்மை வாழ்வின் காரியமே மறுமையாதலால், மறு மையில் துறக்கத்தில் இன்பம் வேண்டுவோர் இம்மையில் இன்ப வாழ்வினராதல் வேண்டும் என்பது காபால சமயத்தின் கொள்கை.

இந் நாடகத்தில் பவுத்த(சாக்கிய)னைப்பற்றிக் கூறுவன, புத்த சமயம் அக்காலத்தில் சீர் குலைந்திருந்த நிலையைக் காட்டுகின்றன. புத்த பிட்சுக்கள் ஊனுணவு கொள்கிறுர்கள்; புத்த விகாரங்களில் உள்ள தலைவர்கள் உயர்வகை உணவுண்டு உடல் வளம் பெற்றுள்ளனர். அங்கே பொன்னும் பொருளும் நிறைந்து உள்ளன. புத்த மடங்களில் சமயக் கொள்கை கட்கு மாறுன செயல்கள் நடைபெறுகின்றன. தங்கள் தீயொழுக்கத்தால் உண்டான வடுக்களை மறைத்தற்கென்றே புத்த குருமார்கள் தங்கள் உடலை மறைத்திருக் கின்றுர்களென மன்ன னுன மகேந்திர வன்மனே உரைப்பது வியப் பைத் தருகிறது. அறங்கூறும் அவைகளில் நீதி யின் வாயைப் பொற்காசு என்னும் மண்ணைக் கொட்டி அடைத்து விடுகிறுர்கள் புத்தர்கள்; அவர்கட்கு இறைவனுன புத்தன் வேதாந்த நூல்களிலிருந்தும் பாரதத்தி லிருந்தும் சிறந்த கருத்துக்களைக் களவு செய்து தானே கண்ட தாகக் கூறுகிறுன் என்று மத்த விலாசம் கூறு கிறது.

அவன் காலத்தில் நடு நாட்டில் திருவாமூ ரில் புகழனுர்க்கு மகனுய்க் கல்வி கேள்வியில் சிறந்து, சமண சமய நூல்களில் புலமை மிகுந்து

சமண சமயத்தவராகித் தரும சேனராய்ப், பிற்காலத்தே திருநாவுக்கரச ராயின மருணீக் கியார் பெருமையை மகேந்திரன் அறிந்திருந் தான். சயின தருமத்தைப் பொது மக்கட்கு எடுத்துரைக்கும் சயினத் தொண்டர் படை தருமசேனை எனவும், படைத் தலைவர் தரும சேனர் எனவும் விளங்கினர். துறவிகள் பலரும் திகம்பரர்களாய் இருந்தமையின் ''ஆடை யொழித்து அமணே திரியும்'' அவர்கள், பகற் போதுகளில், மக்கள் வழங்குதலில்லாத குன்று களிலும், மலைகளிலும், குகைகள் கண்டு அவற்றில் ஒடுங்கியிருப்பர். இருள் மாலைப் போதில்ஊர்க்குட் போந்து ஊரவர் இடும் உணவை ஏற்றுண்டு வாழ்ந்தனர். ''ஊர் மேற்று அமணர்க்கு ஓடு'' என அந்நாளில் வாழ்ந்த முன்றுறையரையர் என்ற சான் றோர் குறித்திருக்கின்றார்.

இக்கட்டத்துள் தருமசேனராய் விளங்கிய மருணீக்கி, சூலைநோயால் துன்புற்றுத்தம் முடைய தமக்கையான திலகவதியாரால் திருநீறு பெற்றுத் திருவதிகை வீரட்டானத்துச் சிவ பெருமானை இனிய பாட்டுக்களால் பரவி நோய் நீங்கிச் சைவரானார். அவரது செய்கை சயின சமயத்தவரிடையே பெரிய மனக் கலக்கத்தை விளைவித்தது. தங்கள் சமயத்தின் ஆணி வேரே தகர்ந்தொழிந்ததென அஞ்சி வருந்தி னர்; சமயத்துக்கு இது வீழ்ச்சி தரும் என வெருவிய சயினச் சான்றோர் வேந்தனை மகேந்திரனைக் கண்டு முறையிட்டுக் கொண் டனர். ஒரு சமயக் கொள்கையைக் கைவிட்டு வேற்றுச் சமயக் கொள்கையைமேற் கொள்வது அவரவர் தனியுரிமையென அந்நாளைத் தமிழ் நாடு கருதிற்று.

தருமசேனர் சைவரானது மகேந்திரன் மனத்தை மருட்டிற்று. அவரை நேரில் வருவித்து உண்மையை யறிய விழைந்து அவர்க்குத் தூது விடுத்தான். தருமசேனர் நிலை யின் நீங்கிச் சிவநெறிச் செல்வராகிய திரு நாவுக்கரசர், வேந்தன் ஆணையை மறுத்து ''நாமார்க்கும் குடியல்லோம்,'' ''பாராண்டு பகடேறி வருவார் சொல்லும் பணிகேட்கக் கடவோமோ'', ''நாவலந் தீவகத்தினுக்கு நாதரான காவலரே ஏவி விடுத்தாரேனும் கடவமல்லோம்'' என்றும், 'வந்தீர் ஆர்? மன்னவனுவான்தான் ஆர்?' என்றும் சொல்ல லுற்றார்.

மகேந்திரன் விடுத்த தூதுவரைக் கண்டு'சமய மாற்றம் குற்றம்போலும்' என்று அஞ்சின தமிழ் மக்கள் திருநாவுக்கரசரது செம்மல் உரை கேட்டுத் திகைத்தனர். சூழ இருந்தவர் சொன்னது கொண்டு மகேந்திரனிடம் சென்று நிகழ்ந்தது கூறிச் சைவ நெறியின்கண் நிலை நின்றார், நீறு மேற்கொண்ட நாவுக்கரசர்.

அவரால் சயின தருமத்துக்கு நேரக்கூடிய இடையூற்றையே பொருளாகக்கருதிய சமணர், நீற்றறையில் இடுதல், களிற்றியானையின் கால் இடறச் செய்தல் முதலிய செயல்களால் அவரை அச்சுறுத்தினர். அந்நிலையில் அவர் பாடி யருளிய திருப்பதிகங்கள் மகேந்திரன் மனத் தைத் திருப்பின. சமணர் சிலர் நஞ்சு கலந் தளித்த பால் அவர்க்கு அமுதமாயிற்று. பின்பு, அதனை நினைத்து 'வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த, நஞ்சமுதாக்குவித் தார் நனிபள்ளி அடிகளாரே' என்று நாவரசர் பாடினார். அவரைத் திருப்பாதிரிப் புலியூர்க்கு (அந்நாளில் அவ்வூர்க்கு வடவர் பாடலி எனப் பெயரிட்டு வழங்கினர்) கொண்டு சென்று கல் லொடு பிணித்துக் கடலில் அவரை விடுத்த னர். பின்பொருகால் நாவுக்கரசர் நீலக்குடி சென்றிருந்தபோது இந்நிகழ்ச்சியை நினைந்து,

''கல்லினொடெனைப் பூட்டி அமண் கையர்
ஒல்லைநீர்புக நூக்க, என் வாக்கினால்,
நெல்லு நீள்வயல் நீலக் குடிஅரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேன் நன்றே''

என்று பாடியுள்ளனர்.

இந் நிகழ்ச்சிகளைக் கண்ட மகேந்திரன் மனம் மாற்றமடைந்தது. அவனது சிந்தைசிவநெறிக் கண் சென்றது; சிவ பரம்பொருளின் திருவருட் பேற்றில் திளைக்கலுற்றது.

முதன் முதலில் நாவரசர் நன்ஞானமும் நல் லருளும் பெற்ற திருவதிகை சென்று சிவனருள் பெற்ற மகேந்திரன், அங்கே சிவனுக்கொரு தனிக் கோயிலெடுத்துக் குணபரேச்சுரம் என்று பெயரிட்டான். திருவதிகையில் அக்கோயில் பழுதுற்றுக் கிடக்கிறது. மனம் மாறிய மகேந்திர வன்ம பல்லவன் கட்டிய இக்கோயில், சைவத் தின் தனி மாண்பை உணர்த்தும் தனிச் சிறப்பு உடையதென நினைக்கும் சைவர்கள் பிற்காலத் தில் மாண்டொழிந்தனர். இறந்து பட்ட நல் லுணர்வை மீளவும் நெஞ்சில் நினைக்கும் நீர்மையை இந்நாளைய சைவம் இழந்து விட்டது.

குணபரேச்சுரம் கட்டிச் சிவனருளில் மூழ்கிச் சிந்தை குளிர்ந்த செல்வப் பல்லவ மன்னன் திருச்சிராப்பள்ளிக்குச் சென்றான். அங்கே சிரா என்னும் சயினச் சான்றோர் சமண் பள்ளி நிறுவிச் சயின தருமத்தைக் காவிரிக் கரையில் பரப்பி வாழ்ந்தனர். மகேந்திரன் சிராப்பள்ளிக் குன்றில் சிவ பிரானுக்கொரு சிறந்த கற்கோ யிலை மிக்க சிறப்பமையக் கட்டி, அதற்கு ''லலிதாங் குர பல்லவேச்சுரம்'' (தென். கல். தொ. XII எண் 9) என்று பெயரிட்டுப் பரவி னான். அக்கோயிலில் அவனது திருவுருவமும் செய்து வைக்கப்பெற்றது. அது இப்போது காணப்படவில்லை என ஆராய்ச்சியாளர் உரைக் கின்றார். காணமற் போனதற்கு நாடறிந்த காரணம் இல்லாமல் இல்லை. எடுத்துரைப் பதில் நற்பயன் இல்லை. செங்கற்பட்டு மாவட் டத்தின் வல்லம் என்ற ஊரில், கந்தசேனன் என்ற சயினன் சைவனாகி ஒரு கோயிலைக் கட்டி 'இத்தேவகுலம் (கோயில்) மகேந்திர வன்மன் வாசலான வயந்தப்பிரிய அரசர் மகன் கந்த சேனன் கட்டியது (தென். கல். தொ. முன் பக்.3). என்று பொறித்துள்ளான். மகேந்திர வன்மன் வாசல் என்பது மகேந்திரவன்மன்

அரண்மனே வெளியதிகாரிக்குப் பெயர். அவனுடைய இயற் பெயர் வயந்தப்பிரியன் என்பது. அவன் மகன் சயினத்தில் கந்தசேனனுக இருந்து பின்பு சைவம் புகுந்து இத் திருப்பணி செய்துள்ளான். கோயிற்கு வசந்தேச்சுரம் என்ற பெயர் வழங்குவதை நோக்கின், கந்தசேனன் இதனைத் தன் தந்தையின் பெயராற் கட்டியிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

சைவ தருமம், அவருடைய மனத்தில் சமயக் காழ்ப்பற்ற தன்மையை எய்துவித்தது. சைவ வேந்தான மகேந்திரன், தனது ஆட்சியில் சைவ வைணவ சயின பௌத்த சமயத்தவர்க்கு வேண்டும் கோயில்களையும் பள்ளிகளையும் செய்து உதவினுன். மகேந்திரவாடியில் திருமால் கோயிலொன்றைக்கட்டி ''மகேந்திர விஷ்ணு கிரகம்'' என்று பெயர் பொறித்தான். (எபி. இன்டி. தொ. 4, பக். 152). மண்டகப்பட்டு என்னும் ஊரில் சிவன் திருமால் பிரமன் என்ற மூவர்க்கும் 'செங்கல்லும் சுண்ணும்பும் மரமும் இன்றிக் கருங்கல்லாலேயே' கோயில் கட்டினுன். (எபி. இன்டி. தொ. 17, பக். 14).

மத்த விலாசத்தால் மகேந்திரனுடைய நாடகக் கலை விருப்பு ஓரளவு உணரப்படும்; அதனேடு, ஓவியக் கலையில் அவன் கொண்டிருந்த வேட்கையைச் சிற்றண்ணல் வாயிலில் காணப்படும் ஓவியங்களால் அறிகிருேம். மாமண்டூர்க் கல்வெட்டுக்களில் தட்சிண சித்திரம் என வரும் தொடர் ஓவியக் கலையைக் காட்டுவதாகச் சிலர் எண்ணுகின்றனர்; தட்சிண சைத்தியம் எனற்பாலது சித்திரம் எனப் பிழைக்கப் பட்டுள்ளது என்பவரும் உண்டு; இவ்வாறே மகேந்திரன் இசைக் கலைக்கும் நல்லாதரவு செய்ததைக் குடுமியான்மலைக் கல்வெட்டுக் காட்டுகிறது எனத் துப்ரயில் முதலியோர் (பல். பக். 23) கூறுகின்றூர்கள்.

முதல் மகேந்திரனுடைய கல்வெட்டுக்கள் சிலவே கிடைத்துள்ளன; அவை பலவும் வடமொழியிலே அமைந்திருக்கின்றன. அவனுக்கு முன்னேர்களில் ஒருவனை சிம்மவர்மனுடைய செப்பேடு ஒன்றில், தமிழ் உரைநடை காணப்படுகிறது. திருப்பதிக் குன்றத்து வச்சிர நந்தி குரவர்க்குப் பள்ளிச் சந்தமாக நிலம் கொடுப்பதாகத் தெரிவிக்கும் அது, ''வெண்குன்றக் கோட்டத்துப் பெரு நகர நாட்டு நாட்டார் காண்க. தம் நாட்டு அமண் சேர்க்கைப்பருதிக் குன்றில் வஜ்ரநந்திக் குரவர்க்குப்பள்ளிச் சந்தமாகக் கொடுத்தோம்' எனத் தொடங்குகிறது. மகேந்திரனுக்குப் பின்வந்த பல்லவர்களின் செப்பேடுகளிலும் இத்தகைய தமிழ் உரைநடை காணப்படுகிறது. இவற்றை நோக்கின் மகேந்திரன் காலத்தும் வட சொற்கள் கலந்து மணிப்பிரவாள நடை நிலவியிருக்குமென்று கருதலாம். தமிழில் வடமொழிச் சொற்கள் பழைய இலக்கண மரபுக்கு மாறுகப்புகுந்து இடம் பெறுவதற்குப் பல்லவஅரசு ஆதரவு நல்கியிருப்பது தெரிகிறது. பல்லவர் காலத்துக்கு முன்னைய கல்வெட்டுக்களில் தூய தமிழ் நடை அமைந்திருப்பதை ஆங்காங்குக் காணப்படும் 'பெயரும்பீடும் எழுதிய பிறங்குநிலை' நடுகற்களில் காண்கின்றேம். மகேந்திரனை உள்ளிட்ட பல்லவ வேந்தரின் எழுத்துக்கள் மணிப்பிரவாளமாய் இயன்றிருப்பதற்குக் காரணம், அவரது அரசியற் சூழலில் வடமொழிப் புலமை மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தமையேயன்றி வேறில்லை.

இச் செல்வாக்கின் பயனுக நாடு முழுவதும் சதுர்வேதி மங்கலங்கள் தோன்றின; வடமொழிப் பயிற்சி வளம் பெற்றது. பல்லவர்களேயன்றிப் பின் வந்த பாண்டியர்களும் சோழர்களும் இப் பணியில் பேராதரவு செய்தனர்.

கி.பி. பதின்மூன்ரும் நூற்ருண்டில் நடு நாட்டிலும் தொண்டை நாட்டிலும் புகழ்பரப்பி வாழ்ந்த காடவர் குடித் தோன்றலான கோப் பெருஞ் சிங்கன் காலத்தில் தமிழ் அரசியலாதரவு பெறுவதாயிற்று. அவனுடைய கல்வெட்டுக்களில் இனியதமிழ்ச் செய்யுள் இடம் பெற்றது.

அடுத்து வந்த நூற்ருண்டுகளில் விசயநகர வேந்தரது ஆட்சி சிறப்பெய்தியது. அவர்கள் தமிழரல்லர். அதனுல், கோயில்களில் தெய்வங்களின் தமிழ்ப் பெயர்களும்வட மொழியில் பெயர்க்கப்பட்டன. வழிபாடுகள் வடமொழியில் நடைபெறுவது தோன்றிற்று. வடமொழியில்தான் வழிபாடும் அருச்சனையும் செய்ய வேண்டும் என்று எந்த வடநூலும் கூறவில்லை; சமயச் சான்றேருள் எவரும் மொழிந்ததுமில்லை. சேக்கிழார் முதலிய பெருமக்கள் ''அருச்சனை தமிழ்'' ஆவதை எடுத்துக்கூறியுள்ளனர்; அருச்சனைக்குரிய முறையில் இனிய தமிழில் பாடிக் காட்டியவர் திருநாவுக்கரசரும் மணிவாசகப் பெருமானும் ஆவர். இப் பெருமக்களை மறைமுகமாக மறுக்கும் கூட்டம், தமிழில் வழிபாடு செய்வதற்குத் தடை நிகழ்த்திக் கொண்டிருக்கிறது. சைவ வழிபாட்டுணர்வும், சைவ ஒழுக்கமும் பெருகுமானுல், இடைக்காலத்தில் தோன்றிய மொழியிடையூறு போயொழியும், மெய்யைப் பொய் வெல்லாது.



# திருப்பேரூர்

## (தல வரலாறு)

கே.எஸ்.ஜெகன்னாதன்



இறவாப் பனை

திருப்பேரூர், கோயமுத்தூர் நகரிலிருந்து மேற்கே சுமார் 7 கி.மீ. தொலைவில் உள்ளது. பேரூர் செல்லக் கோவையிலிருந்து நகரப் பேருந்துகள் அடிக்கடி செல்கின்றன. போய் ஆண்டவனை வழிபட்டுவர மிகவும் வசதியாக இருக்கின்றது. இங்கு இருக்கின்ற பட்டீசுவரர் திருக்கோயில் வரலாற்றுச் சிறப்புமிக்கதாகும். சுயம்புலிங்கம் இங்கு மூலவராகக் காட்சி தருகின்றார். பட்டீசுவரப் பெருமானைத் தரிசித்து வழிபட்டுச் செல்வோருக்கு வாழ்வில் நலமேற்படும் என்பர்.

பேரூர் என்பது பெரிய ஊர் எனப் பொருள்படும். ஆனால் இன்றைய தினம், பேரூர் ஒரு சிறிய ஊராகக் காணப்படுகிறது. பண்டைக் காலத்தில் ஒரு பெரிய சிறந்த நகரமாக இருந்தது என்று வரலாறு கூறுகிறது.

‘‘அயலிடை வேறடி நெருங்கக் குடி நெருங்கியுளதவ்வூர்’’ என்ற முன்னோர் வாக்கும், ‘‘செல்வம் சகடக்கால் போல் வரும்’’ என்றபடி உண்மையிலேயே பெரிய பேரூராயிருந்தது நாம் காணும் சிற்றூராகவும், சிற்றூராய்த் தோன்றிய புத்தூர் கோவன்புத்தூர் என்று பெரிய நகரமாகவும் மாறியிருப்பது காலத்தின் வலிமை!

இத்தலம் மிகவும் சிறந்து விளங்கியது. சமய நெறிகள் வாழ வழி வகுத்தது. சைவம் தழைத்தோங்கிடச் செய்தது. தேவாரப் பாடல்களில் இத்தலத்தைப் பற்றிய சிறப்பியல்புகளை அப்பர் சுவாமிகளும், சுந்தர மூர்த்திகளும் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

‘‘ஆரூர் மூலத்தானம் ஆனைக் காவும்
ஆக்கூரிற்றான்றோன்றி மாடம் ஆவூர்
பேரூர் பிரமபுரம் பேராவூரும்
பெருந்துறை காம்பீலி பிடவூர் பேணுங்
கூரார் குறுக்கைவீ ராட்டா னமும்
கோட்டூர் குடமூக்கு கோழம் பமும்
காரார் கழுக்குன்றுங் கானப் பேருங்
கயிலாய நாதனையே காணலாமே.’’

—அப்பர் தேவாரம்.

ஆரூ ரத்தா! ஐயாற் றமுதே!
அளப்பூர் அம்மானே!
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவிற்
கருகா வூரானே!
பேரூர் உறைவாய் பட்டிப் பெருமான்
பிறவா நெறியானே!
பாரூர் பலரும் பரவப் படுவாய்
பாசூர் அம்மானே!

—சுந்தரமூர்த்திகள் தேவாரம்.

ஆண்டவனை இதயத் தூய்மையோடு பாடல்களால் வழிபட்டு வந்துள்ளனர். தேவாரத்திலும், பெரியபுராணப் பாடல்களிலும் புகழப்படும் கீர்த்திமிக்க இத்தல வரலாற்றைப் பார்ப்போம்.

உலகநிலை, ஆன்மநிலை என்ற இருநிலைகளிலேயும் உயிர்களுக்குச் செய்யும் எல்லா உபகாரங்களிலும் பெரிதாயிருப்பதால், இந்த ஊர் பேரூர் எனப் பெயர் பெற்றது. இது ஒரு காலத்தில் புடைநகர், இடைநகர், உண்ணகர் என்ற பகுதிகளோடு மிக அழகாக அமைந்திருந்தது.

திருக் கைலாச மலையிலே உமாதேவி சமேதராக இருக்கும் சிவபெருமானிடத்திலே, திருநந்தி தேவர் ஒரு தினத்தில் ‘‘சுவாமி! தேவரீர் எழுந்தருளியிருக்கும் தலங்களில் இத்திருக் கைலாசத்திற்கு ஒப்பானது எது’’ என வினவிட ‘‘உத்தரகைலாசம், தட்சிண கைலாசம், மத்தியகைலாசம் என்னும் மூன்றும் ஒத்த சிறப்பினை உடையது. ஆயினும் சுத்தநீர் சமுத்திர தீரத்திலுள்ள உத்திர கைலாசமும், இம்மத்திய



யானையுரி போர்த்த மூர்த்தி

கைலாசமும், தேவர் முனிவர்க்கன்றி மற்றை யோர்க்கு எளிதில் அடைவதற்கு அரியன, ஆத லால் திருப்பேரூர் என்னுந் தட்சிண கைலாசமே யாவரும் சென்று எளிதில் மோட்சங்களை அடையத்தக்கது'' என்று திருநந்தி தேவருக்குத் திருவாய் மலர்ந்தருளினர்.

இதுபோலக் காலவ முனிவர் முதலியோர் சிவபிரான் திருநடனத்திற்காகக் குறித்த காலத் தையே நாடிக் கொண்டிருந்தனர். காலவேச் சுரத்தில், அரசடியில், வெள்ளியம்பலம் உள்ள தாகச் சிவபெருமான் அருளியபடி அதனைக் காணப் பெற்றிலேன் என்று கோமுனிவர் தியா னித்தார். அதுபோது, ''பழைய அம்பலத் தைப் பரமசிவன் மறைத்தபடியால் அவ் விடத்தே ஒரு சபையும் அதிலே நடராசர் திரு



அக்னிவீரபத்திரசுவாமி

வுருவும் அமைத்து வழிபடுவாயாக'' என்று ஓர் அசரீரிவாக்கு எழுந்தது. உடனே கோமுனிவர் விசுவகம்மியனை வருவித்தார். ஆனல் சபை நிர்மாணிக்கும் இடம் புரியாது திகைத்து நிற்க லானர். அதுபோது சிவபெருமான் சித்தராகத் திருவுருக் கொண்டு பற்பல அற்புதங்களைச் செய்தருளினர். கோமுனிவர் சித்தரை நாடி ''அய்யனே! சிவபிரான் திருநடனஞ் செய்கின்ற திருச்சபையைத் தெளிவிக்க வல்லீராயின் நீவிரே முற்றும் உணர்ந்த பெற்றியர்'' எனக் கூறினர்.

சித்தேசர் ஆதிலிங்க மூர்த்திக்கு வடகிழக் கில் திருமூர்த்தி யுருவான அரசடி நிழலில் அமர்ந்து, ''வெள்ளியம்பலம் எழுக'' என்று திருவாய் மலர்ந்தருளினர். உடனே வெள்ளி யம்பலம் பொள்ளென எழுந்தது. தேவர்கள் பூமாரி பொழிந்தனர். இத் திருச்சபைக்கேற்ப நடராசர் திருவுருவம் செய்தருளுவீராக எனக் கோமுனிவர் வேண்டியபடி திருச்சபையிலே நடராசர் திருவுருவோடு சிவகாமியம்மை திரு வுருவையும் செய்தருளினர். அனைவரும் வணங்கி நின்றனர்.



நிருத்த கணபதி



ஆறுமுகசுப்பிரமணியம்

இங்ஙனம் உருப்பெற்றதே இப் பேரூர்த் தலமென கூறப்படுகின்றது. இத்தலத்தினைப் பண்டைய மன்னர்கள் கட்டிக் காத்த வரலா றும் உண்டு.

தமிழ் நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலை யோரமாக, காவேரியின் மேல் பாகத்தில் அதன் இருபுறமும் இருப்பது கொங்கு நாடு. இந்நாடு சங்ககாலம் முதற்கொண்டே தனி நாடாக இருந்ததற்குப் புறநானூறே ஆதாரமாகும்.

கொங்கு நாட்டின் உட்பிரிவுகளில் ஒன்று ஆறைநாடு ஆகும். இது வெள்ளிமலை முதல் அவிநாசி மட்டும் எல்லை வகுத்துள்ளதாகும். இப்போதைய கோவை-அவிநாசி இருவட்டங்களையும் உள்ளடக்கியதாகும். இந்த ஆறை நாட்டில் மேல்பாகத்தைப் பேரூர்நாடு என்ற தனிப்பெயரில் அமைத்தனர். இதற்கான சான்றுகள் கல்வெட்டுகளில் காணக்கிடைக்கின்றன.

பண்டைத் தமிழ் மக்களின் வாழ்க்கை நிலையை அறியத்தக்க ஆதாரங்கள் பல இங்குக் கிடைத்திருக்கின்றன. அவர்கள் உபயோகித்து வந்த மண்பாண்டங்கள், தட்டுமுட்டுச் சாமான்கள், இடுகாட்டுக் குழிகள் முதலியனவாகும். பேரூரிலிருந்து சித்திரச் சாவடிக்குப் போகும் வழியில் சில குழிகள் இருக்கின்றன. அவை மாண்டவர்களை அடக்கம் செய்ய உபயோகப் படுத்தப்பட்டது என்பதைப் பானைக்குள் கிடைத்த எலும்புகளை வைத்து அறியமுடிகிறது. மணிமேகலையில் ''தாழ்வயினடைப் போர் தாழியிற் கவிப்போர்'' என்று இருத்தலும், புறநானூற்றுச் செய்யுளில் ''தேவர் உலகம் எய்தினன் ஆதலின் அன்னோற் கவிக்கும் கண்ணகன் தாழி'' என்று இருப்பதுவும், பண்டைக் காலத்தன என்பதை உறுதியாக்குகின்றது.

கி.மு. 44 முதல் கி.பி. 54 வரை ஆண்ட உரோமானிய அரசர்களின் நாணயங்களைப் பேரூரிலும், அதை அடுத்துள்ள வெள்ளலூரிலும் கண்டு பிடித்துள்ளனர். பிற்காலத்து அரசர்களின் நாணயங்களையும் கண்டு பிடித்துள்ளனர். இவ்வளவு அதிகமான நாணயங்கள் ஒரே இடத்தில் கிடைத்ததைப் பார்க்கும்போது, இந்நாட்டில் வாழ்ந்த அன்றைய தமிழர்கள் நாகரிகத்தில் முதிர்ச்சி அடைந்தும், வாணிபத்தில் சிறந்தும் விளங்கி இருக்கின்றனர் என்பது தெரிகிறது. அக்காலத்தில் நாகரிகத்தில் முதிர்ச்சி பெற்றவர்களான உரோமானியருடன் வாணிபமும், போக்குவரத்தும் கொண்டிருந்தார்கள் என்று எண்ணிட இடம் இருக்கிறது.



ஊர்த்துவதாண்டவமூர்த்தி

பண்டைத் தமிழ் நூல்களின் வாயிலாக அறிவதெல்லாம், அக்காலத்தில் பேரூர் சேர மன்னர்களின் ஆளுகைக்குள் சேர்ந்திருக்க வேண்டுமென்றும், இந்நாட்டை அதியமான் போன்ற வேளிர்கள் ஆண்டிருக்க வேண்டும் எனவும் எண்ணிட ஆதாரங்கள் கிடைத்துள்ளன.

இந்தக் கொங்கு வளநாட்டிலே காவிரி, பவானி, அம்பராவதி போன்ற நதிகள் பரந்து பாய்ந்து வளப்படுத்துகின்றன. இவைகளின் வளத்தினால் இங்குச் சிறப்பாக உழவுத்தொழில் மேற்கொள்ளப்பட்டது. நெல், கரும்பு, வாழை, கமுகு, தென்னை, மா முதலியன பயிராகி மக்களின் வாழ்வுக்கு உயிரூட்டி வந்திருக்கின்றன.

சுமார் 8 அல்லது 9-ஆம் நூற்றாண்டில் பேரூரை வீரகேரளன் என்ற சேர அரசன் வெற்றிகொண்டு இருக்கவேண்டும். வீரகேரளம் என்ற பெயருடன் ஒரு கிராமம் இப்போதும் கோயமுத்தூருக்கு மேற்கே இருப்பது இங்கே கவனிக்கத் தக்கதாகும். மற்றும் பேரூர் நாட்டைச் சார்ந்த நாகேசுரத்தில் அமர புஜங்க சதுர்வேதிமங்கலம் முதலிய பெயர்கள் காணப்படுகின்றன. இப்பெயர்களாலே கேரள தேசத்து மன்னர் இந்நாட்டை உட்படுத்தி ஆண்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

9-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டியர்கள் சிறிது மேம்பட்டு வந்து கொங்கு நாட்டைக் கவர்ந்து ஆண்டார்கள் என்று சொல்லலாம். அக்காலம் மாறன் சடையன் என்ற பாண்டியன், கொங்குநாட்டை வென்று பேரூர்அடைந்து அங்குத் திருமாலுக்குக் குன்ற மன்னம் பெருங்கோயில் கட்டினதாகச் சடாவர்மன்சாசனத்தால் தெரிகிறது. இப்பாண்டியன் பரம வைணவ பக்தன். மதுர கவியாழ்வார் அவன் அமைச்சராக இருந்தாராம். இதைச் சடாவர்மன் சாசனத்தில்,

''காஞ்சி வாய்ப் பேரூர் புக்குத்
திருமாலுக் கமர்ந் துறையக்
குன்றம் அன்னதோர் கோயிலாக் கியும்,
ஆழி மூந்நீர் அகழாக
அகல் வானத் தகடுரிஞ்சும்
பாழி நீண் மதில் பரந்தோங்கும்
பகலவனும் அகலவோடும்''

என்று வருகிறது.

ஆனால் இன்று அக்குன்றக்கோயில் அழிந்து பட்டு, அதன் மூல விக்கிரகங்கள் இப்போது கோயிலின் முதல் சுற்றின் தென்பக்கத்தில் வெளியில் வைத்திருக்கும் இலக்குமிநாராயணர் விக்கிரகம் என்றும் தெரிகிறது. இவ்விக்கிரகம் பண்டைக் காலத்துடையது என்பது காணும் போதே தெரியவரும். அச்சிலைகளைத் தட்டிப் பார்த்தால் வெண்கலம் போலச் சப்திக்கும்.

1292-ல் ஆண்ட ஒய்சள வீரவல்லாளன் காலத்தில், இத்திருக்கோயில் இருந்ததாக அவன் சாசனம் கூறுகிறது.

கொங்கு நாட்டில் உள்ள சாசனங்களை ஆராய்ச்சி செய்தால், பலவித காரணங்களைக் கொண்டு பார்க்கும்போது, ஒரு அரச பரம்பரையே இங்கு அரசாண்டதென்று கூற முடியும். அதை அடியில் கண்டபடி கணக்கிடமுடியும்

| | |
|---|---|
| விக்கிரமசோழன் | 1004—45 |
| அபிமானசோழ ராசாதி ராசன் | 1080—1110 |
| இராசாதி இராச உத்தமன் | 1110—1117 |
| இராசாதி இராச வீரசோழன் | 1117—1135 |
| உத்தமசோழ வீரநாராயணன் | 1135—1149 |
| குலோத்துங்கன் | 1149—1183 |
| வீரசோழன் | 1183—1206 |
| வீரஇராசேந்திரன் | 1207—1255 |
| விக்கிரமன் (இரண்டு) | 1255—1263 |
| இராசகேசரி | 1263—1273 |
| விக்கிரமன் (மூன்று) | 1273—1303 |

சோழர் அரசு 13-ஆம் நூற்றுண்டில் சீர்குலைந்த காலத்தில் பாண்டிய மன்னர்கள் முன்னணியில் இருந்ததாக வரலாறு நமக்குக் கூறுகின்றது.

மேற்சொன்ன அரசர்களால் பரிபாலிக்கப்பட்ட திருப்பேரூரில் குடிகொண்டிருக்கும் சுயம்பு மூர்த்தி, அழகாக அமைந்திருக்கிறது. இவ்வாலயத்திலுள்ள கனகசபையில்கோரமுனி, பட்டிமுனி இருவர்க்காக ஆடிய பாதத்துடன் விளங்கும் நடராசர் வடிவம் மிகமிக அழகானது. இக் கனகசபையில் சிற்பக்கலையின் அழகு சிரிக்கின்றது. சைவசமயச் சார்புள்ள இறை வடிவங்களின் எழில்மிகு வேலைப்பாடு சிந்தை கவர்கின்றது; விமானம், அங்கே வடிக்கப்பட்ட தாமரை மலர், கல்லாலான சங்கிலிகள்-நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன.

இங்கு ஆலயத்திற்கு எதிரில் அமைந்துள்ள தெப்பக்குளம் மிகவும் அழகுள்ளதாய் அமைந்துள்ளது. பதினொரு வளைவுகளை உடையது. சிறியதும், பெரியதுமான இரதங்கள் அழகிய வேலைப்பாடுகள் அமையப்பெற்றுத் திகழ்கின்றன.

பன்னிரண்டாம் நூற்றுண்டில் சோழர்களும், பாண்டியர்களும் பலவீனமடைந்த போது மைசூர் நாட்டுத் துவார சமுத்திரத்தில் ஆண்ட ஒய்சள அரசன் விஷ்ணுவர்த்தனன் கொங்குநாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். அவன் காலத்திலே இருந்த சாசனங்களைப் பார்த்தால் பல தானங்கள் பேரூர்க் கோயிலுக்குச் செய்தது தெரியவரும். இந்தத் தானங்களை வழங்கிய தன்மையினைப் பார்க்கின்ற போது, அப்போது நாடு நல்ல செழிப்பாக இருந்திருக்க வேண்டும் என்று எண்ணலாம்.



பேரூர்த் திருக்கோயிலின் கலைவேலைப்பாடு மிக்க முன் நுழைவு மண்டபம்.

வளத்திலுலும், புகழிலுலும் செழித்து விளங்கும் கொங்கு நாட்டின் புகழுக்கு ஒரு மணியாரமாய் விளங்குவது திருப்பேரூர் ஆகும். இப்பகுதியில் வாழும் மக்கள் பெரும்பாலோர் விவசாயத்தை மேற்கொண்டு இருக்கின்றனர். பூமியன்னை தன் வளத்திலுல் நெல், கரும்பு, வாழை இன்னும் பிற பயிர்கள் வளரத் தன்னை ஆட்படுத்திக் கொண்டுள்ளாள்.

காஞ்சிமா நதி எனும் நொய்யல்நதி, அதன் இரு மருங்கிலும் தோன்றும் பச்சைப் பசேலென்ற வான்முட்ட வளர்ந்து நிற்கும் தென்னந் தோப்புகளின் செழிப்புக்கு ஆதாரம் ஆகும். சோழன் துறை எனும் அதன் துறை ஆகிய யாவும் மிகவும் அழகு பெற்றவை. சோழன் துறை செல்லும் வழியிலுள்ள பட்டி விநாயகர் ஆலயம் சிறிதே எனினும் எழில்மிக் கது.

திருப்பேரூரை வடக்கிலும், தெற்கிலும் பாதுகாத்து நிற்பவை வடகைலாசம், தென் கைலாசம் என்னும் ஆலயங்கள். என்றும் அழி வற்ற இறவாப்பனையும், பிறப்பே இல்லாத பிற வாப்புளியும், பைத்தியத்தை நீக்கும் புண்ணிய தீர்த்தம் சுரக்கும் பிரம்ம தீர்த்தக் கிணறும், இத்தலத்தின் புனிதத்தை இன்றும் எடுத்துக் கூறுபவை.

பேரூர் ஆலயத்தில் சிற்ப வேலைப்பாடுகள் சிறந்து விளங்குகின்றன. ஒவ்வொரு சிற்பமும் ஒவ்வொரு காவியத்தைப் படைப்பதாக வடித்து வைக்கப்பட்டிருக்கின்ற அழகே தனி. வடிக்கப் பட்டிருக்கும் சிற்பங்கள் பண்டைய மக்களின் பழக்க வழக்கங்களையும் படம் பிடித்துக் காட்டு வதாக அமைந்திருக்கின்றது.

முகப்பில் அழகிய கோபுரம் வானளாவ நிற்பதைக் காண்கின்றோம். அதில் சிற்பிகளின் கைவண்ணம் காண்கிறோம். உள்ளே பட்டீச் சுரப் பெருமான் ஆலயத்தில் இருக்கும் தூண் ஒவ்வொன்றும், ஒவ்வொரு கவிதை ஊற்றெனத் திகழ்கிறது.

தமிழ்க் கடவுள் எனப் போற்றும் முருகக் கடவுள், ஆறுமுகத்தோடு மயில் மீது அமர்ந்து காட்சி கொடுக்கும் சிற்பம், சிந்தையைக்கவரும் சிறந்த வேலைப்பாட்டையும், அந்நாளில் வாழ்ந்த சிற்பிகளின் திறமையையும் நமக்கு எடுத்துக் கூறுகிறது.

யானையுரி போர்த்த மூர்த்தியின் சிற்பம் கலையம்சத்தோடு அழகுற அமைந்திருக்கக் காண்கிறோம். ஒற்றைக் காலைத் தூக்கி நின்று, அணிமணிகள் பூட்டியிருப்பதாகக் காட்சியளிப் பது, கண்ணையும் கருத்தையும் கவர்வதாக இருக்கிறது. அந்த மண்டபத்தில் அமைந்திருக் கும் இதுபோன்ற நிருத்த கணபதி சிற்பம், அக்கினி வீரபத்திர சுவாமி சிற்பம், அகோர வீரபத்திர சிற்பம், பிச்சாடன மூர்த்தி சிற்பம், ஆலங்காட்டுக் காளியம்மன் சிற்பம், ஊர்த்துவ தாண்டவமூர்த்தி சிற்பம் முதலான சிற்பங்கள், அந்நாளில் அதை வடித்த சிற்பிகளின் திறமைக் குக் கட்டியம் கூறுவனவாகக் காட்சி அளிக்கின் றது.

அந்நாளில் ஆண்ட அரசர்கள் கலை உள்ளத் தோடு, அன்றைய பழக்க வழக்கங்களை மைய மாகக் கொண்டு கோயில்களை நிர்மாணித்திருக் கின்ற பாங்கினைக் காண்கிறோம். கோயிலைக் கட்டும்போது கட்டிடத்தின் முழுப்பொறுப்பை யும், ஒரே ஆள் எடுத்துக் கொள்ளாமல் பலபேர் ஒத்துழைத்துச் சிறப்பாகச் செய்து முடித்திருப் பதை ஆங்காங்கே ஆலயத்தின் கல்வெட்டுகள் நமக்கு உணர்த்துகின்றன. உதாரணமாக, பட் டீசுவரப் பெருமான் கோயிலில் ஒரு விட்டத்தை திருவெண்காடுடையான் வீரகங்கன் அமைத்தி ருக்கிறான் என்பதைக் கல்வெட்டு காட்டுகிறது. தென்கயிலாயம் உடையார்கோயிலில் வாயிலின் நிலையையும், மண்டபத்து வாயிலையும் தேவன் சுந்தன் தொண்டைமான் நிறுவியதாகக் காண் கிறோம். இப்படி பலரால் உருவாக்கப்பட்ட கலைக்கோயில்தான் பட்டீசுவரப் பெருமானின் திருக்கோயிலாகும்.


அகோரவீரபத்திரர்


ஆலங்காட்டுக் காளியம்மன்

திருப்பேரூரில் இருக்கும் மிகமுக்கியமான ஆலயங்கள் பட்டீசுவரர் ஆலயம், பச்சைநாயகியம்மன் சந்நிதி, கனகசபை, சுப்பிரமணியர் சந்நிதி முதலியனவாகும்.

திருப்பேரூரில் காண வேண்டிய முக்கியமானவைகள். திருக்குளம். இதனுள் ஐந்து வகையான தீர்த்தங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகின்றது. மாதேசுவரன்கோயில், அழகிய சிற்றம்பலம்-ஆதிபெயர் - இடங்கைநாயக ஈசுவரமுடையார், அரசம்பலவாணர் சந்நிதி, பட்டிவிநாயகர் சந்நிதி, வடகைலாசம் இதில் பிரம்ம தீர்த்தம் உண்டு. பைத்தியம், நாய்க்கடி முதலியவை இத்தீர்த்தத்தால் தீரும் என்பர். இங்கு இறவாப் பனைமரம் இருக்கின்றது. பட்டிசுற்றும் மேடை அரசமரம், பிறவாப்புளி-கல்வெட்டுக்கள் கொண்ட தென் கைலாயம். பாண்டவர் குழிகள் சித்திரச்சாவடி போகும் வழியில் இருந்தன. சோழன்துறை-அரசமரம் மிகப் பெரியது. கணபதி-நாகர்கள், காஞ்சிமா நதிக்கரை, சாந்தலிங்கசுவாமி சந்நிதி முதலியவையாகும்.

வரலாற்றுச் சிறப்புமிக்க இத் தலத்தில் குடமுழுக்கு விழா நடைபெற்றுப் பதின்மூன்று ஆண்டுகள் ஆகின்றன. இப்போது திருப்பணி வேலைகள் நடைபெற்று வருகின்றது. இக்கோயிலின் ஆண்டு வருமானம் சுமார் 1.25 இலட்சமாகும். கோயிலின் உபரி நிதியிலிருந்து காலையும் மாலையும் ஏழைக் குழந்தைகளுக்குப் பசும்பால் வழங்கி வருகின்றனர். விரைவில் குடமுழுக்கு விழா நடத்திடச் சீரிய முறையில் திருப்பணி வேலைகளை நிறைவு செய்து வருகின்றனர். அனைவரும் சென்று வழிபட வேண்டிய புண்ணியத் தலம். சிற்ப வேலைபாடுமிக்க கலைக் கோயிலாகத் திகழும் திருக்கோயில்தான் திருப்பேரூர்.




## இராம காதை,

# தத்துவ நுண்பொருள்

"இராமாயணம் நமக்குப் பல உண்மைப் பொருள்களை உணர்த்துகிறது. மோட்சமாகிய அயோத்தியில், மூலப் பிரகிருதியாகிய தசரதனிடத்தில், சுத்தமாயை அசுத்தமாயை மிச்ரமாயை என்ற மூன்று மனைவிகளில், சுத்தமாயையில் சுத்தாத்மா என்ற இராமன் தோன்றினார். சிரவணமாகிய வசிட்டரிடத்தில், தேகேந்திரியங்களுக்குக் கோன் 'நான்' என்று உணர்ந்து, விஞ்ஞானமாகிய விசுவாமித்திரருடன் சென்று, மக மாயையாகிய தாடகையைச் சங்கரித்து, ஞானமாகிய வேள்விக் காவலை நடாத்தி, காமமாகிய மாரீசனை வென்று, குரோதமாகிய சுபாகுவைக் கொன்றார்.

அறியாமையாகிய கல்லைப் பெண்ணாக்கி, மமகாரமாகிய வில்லை ஒடித்து, ஆனந்தமாகிய சீதையை மணந்து, அகங்காரமாகிய பரசுராமனை வாட்டி, தீர்க்க கோபமாகிய கூனியின் சொற்கேட்ட தன்னலமாகிய கைகேசிவேண்ட, தவமாகிய கானகஞ் சென்று, நிஷ்காம்யமாகிய குகனை நட்புக்கொண்டு, ஆசையாகிய கங்கை வெள்ளத்தைத் தாண்டி, உறுதியாகிய சித்திர கூட மலையில் தங்கினார்.

பக்தியாகிய பரதனுக்கு, பரஞானம் அபரஞானமாகிய பாதுகைகளை வழங்கி, விரோதமாகிய விராதனை வென்று, சமம் தமம் உபரதி திதிட்சை முதலிய முனிவர்களுக்கு அருள் புரிந்து, பட்சமாகிய ஜடாயுவை நேசித்து, மோகமாகிய சூர்ப்பணகையை விரட்டினார்.

இராஜச குணமாகிய இராவணன் ஆனந்தத்தை அபகரிக்க, அதனைத் தேடிச் சென்று, அவித்தையாகிய அயோமுகியை நீக்கி, கவலையாகிய கவந்தனை அகற்றி, நிர்விகல்பமாகிய சபரிக்கு முத்தி நல்கி, மெய்ஞ் ஞானமாகிய அநுமனைக் கொண்டு, அடங்காமையாகிய வாலியை வதைத்து, பரிசுத்தமாகிய சுக்ரீவனுக்குப் பட்டங் கட்டி, மெய்ஞ் ஞானமாகிய அநுமனால், ஆனந்தமாகிய சீதையின் இருப்பிடத்தை அறிந்து, பிறவியாகிய பெருங் கடலை அணை கட்டி, துர்க்குணங்களாகிய அசுரர்களைக் கொன்று, தாமத குணமாகிய கும்பகர்ணனையும், தசேந்திரியங்களாகிய பத்துத் தலைகளையுடைய இராசத குணமாகிய இராவணனையும் வதைத்து, சத்துவ குணமாகிய விபீடணருக்குப் பட்டங்கட்டி, ஆனந்தமாகிய சீதையைச் சிறை மீட்டு, மோட்சமாகிய அயோத்தியை அடைந்து, சுத்தாத்மாவாகிய இராமர் அரசாளுகின்றார். இத்தகைய உட்பொருள்களைத் தன்னகத்தே கொண்டு உணர்த்துவதே, இராமாயணம் ஆகும்."

—திருமுருக கிருபானந்தவாரியார்.



# அருள்மிகு
# சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்
# திருத்தணி

**செங்கை மாவட்டம், தமிழ்நாடு.**

தொலைபேசி : { அலுவலகம் : 25 மலைக்கோயில் : 43
மலைப்பாதை : 96 தங்கும் விடுதி : 87 }

திருமுருகன் உறையுஞ் சிறப்புத் தலங்கள் ஆறுபடை வீடுகளில் ஐந்தாவது படைவீடு திருத்தணிகை. இத்தலம் நக்கீரர், அருணகிரிநாதர், அருட்பிரகாச இராமலிங்க அடிகளார், முத்துசாமி தீட்சிதர் போன்ற பெருமக்களால் பாடல் பெற்றதாகும்.

''நினைத்ததை அளித்திடும், மனத்தினை உருக்கிடும் வழித்துணை வந்திடும்
திருத்தணி முருகனின் இன்னருள் பெற்றிட வாரீர்! வாரீர்!!''

இத்தலம் சென்னை—பம்பாய் இருப்புப் பாதையில் அரக்கோணம் சந்திப்பில் இருந்து வடக்கே 14 கி.மீ.; சென்னை—திருப்பதிப் பாதையில் 84 கி.மீ.; திருப்பதியிலிருந்து தெற்கே 54 கி.மீ. ; காஞ்சிபுரத்திலிருந்து வடக்கே 36 கி.மீ.

**தரிசனம் காலை 6 மணி முதல் இரவு 9 மணி வரை**

| | | | |
|---|---|---|---|
| விசுவரூப தரிசனம் | காலை 6 மணி | சாயரட்சை | மாலை 5மணி |
| காலை சந்தி அபிஷேகம் | காலை 8மணி | அர்த்தசாமம் பூசை | இரவு 8 மணி |
| உச்சிக்காலம் | காலை 10 மணி | | |

**விழாக் காலங்கள்**

1. ஸ்ரீ வள்ளித் திருமணப் பெருவிழா ... பிப்ரவரி, மார்ச்சு
2. சிவராத்திரி 1008 சங்காபிஷேகம் ... மார்ச்சு
3. ஸ்ரீ தெய்வானைப் பெருமண விழா ... ஏப்ரல், மே.
4. ஆடிக் கிருத்திகைத் தெப்பப் பெருவிழா ... ஜுலை, ஆகஸ்டு.
5. சஷ்டிப் பெருவிழா ... அக்டோபர், நவம்பர்.
6. திருப்புகழ்த் திருப்படி விழா ... டிசம்பர்.

**வேண்டுதல்**

பாதி நன்கொடைத் திட்டத்தின் கீழ்க் குடியிருப்பு இல்லங்கள் கட்டிக்கொடுக்க விரும்புவோர் ரூ. 10,000 செலுத்த வேண்டுகிறோம்.

தணிகை முருகனுக்குத் தங்கத் தேர்ப் பணி 6 மாத காலமாக நடைபெற்று வருகிறது. பக்தர்கள் தங்கள் காணிக்கையைத் தங்கத் தேருக்குத் தங்கமாகவும், பிற பொருளாகவும் திருத்தணிக்கோயில் அலுவலகத்தில் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ள வேண்டுகிறோம்.

---

95 அறைகளும், 28 குடியிருப்பு இல்லங்களும் யாத்ரீகர்கள் தங்குவதற்கும் பணிச் செலவுக்கும் விடப்படுகிறது.

---

**1974-ஆம் ஆண்டுக் கிருத்திகை நாட்கள்**

15—7—1974
11—8—1974 ஆடிக் கிருத்திகைத் தெப்பப் பெருவிழா
12—8—1974 ஆடிக் கிருத்திகை 2-ஆம் தெப்பப் பெருவிழா
13—8—1974 ஆடிக் கிருத்திகை 3-ஆம் தெப்பப் பெருவிழா
7—9—1974, 5—10—1974, 1—11—1974, 28—11—1974, 26—12—1974.

திரு. புலவர் மி. ச. நடேசன்,
அறங்காவலர் குழுத் தலைவர்.

திரு. கலவை. அ. கோபாலகிருஷ்ணன்,
அறங்காவலர்.

திரு. கே. சிதம்பரம், பி.ஏ.,
நிர்வாக அலுவலர்.

திரு. வி. எம். துரைசாமி ரெட்டி,
அறங்காவலர்.



தமி[illegible]நாடு முதலமைச்சர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் பிறந்தநாளன்று உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு நிதிக்காக அறநிலையத் துறையின் [illegible]ர்பில் அறநிலைய அமைச்சர் மாண்புமிகு திரு. மு. கண்ணப்பன் அவர்கள், முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவ[illegible]களிடம்

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600034.
ஆசிரியர் : ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,
அச்சிடுவோர் : தமிழரசு அச்சகம், வாலினர் கோட்டம், சென்னை-600002